# ப்ளாண்டர்ஸ் நீலகிரி டீயின்

## இரண்டு பிரபல ரகங்கள் சிக்கனமானது




நீங்கள் ப்ளாண்டர்ஸ் டீயின்
பிரபல்யமான காங்கோ, பாமிலி மிக்சர்,
இந்த இரண்டு ரகங்களையும் விரும்பு
வீர்கள் என்று எங்களுக்குத் தெரியும்.
இவைகள் விலை குறைவாய் இருந்தும்
இவைகளின் மதுரமான மணத்தையும், உயர்ந்த ரசத்தையும், நீங்கள் அனுபவிப்பீர்கள். வீட்டின் தேவைப்படி உபயோகத்திற்காக தயார்செய்து பாக் செய்யப்பட்ட இவைகள் அதிக பிரபல்யமடைந்து வருகிறது. குறைந்த விலையில் வாஸ்தவமான சிக்கனத்தை ஏற்படுத்துகிறது.

இன்றே இந்த உயர்தரமான ரகங்களை தெரிந்துகொள்ளுங்கள்.

---

**தி ப்ளாண்டர்ஸ் கம்பெனி லிட்.,**

கூடலூர், நீலகிரி, தென் இந்தியா. P.K.15.TM

---

தமிழ் நாடகப் புரவலர்

## வைரம் ஸ்ரீ அருணாஜலம் செட்டியார் அவர்களின்

## காரைக்குடி

## ஸ்ரீராம பால கான வினோத சபையார்

# திருமழிசை ஆழ்வார்

**ஜூன் 20உ புதன்கிழமை இரவு 9-மணிக்கு**



நாடக ஆரம்ப விழா

## சென்னை, மவுன்ட் ரோட்

## நியூ தியேட்டரில்



- 150 ஆண் பெண் நடிகர்கள் நடிக்கும் நாடகம்!
- வெளியூர்களில் பொன், வைர விழாக்கள் கொண்டாடிய நாடகம்!
- பார்க்கப் பார்க்க பரமானந்தம் தரும் பக்தி நாடகம்!



*20-6-45 ஆரம்ப தினம் மட்டும் இரவு 9-மணிக்கு*

*மற்றைய நாட்களில் தினசரி நாடகம் கீழ்க்கண்ட விதம் நடைபெறும்:*

*செவ்வாய், புதன், வெள்ளி, ஞாயிறு, மாலை 6-30-க்கு*

*திங்கள், வியாழன், சனி இரவு 9-30-க்கு*

---

டிக்கெட்டுகள்:

ரூ. 3-8-0; 2-12-0; 1-10-0; 1-3-0; அணா 0-10-0

முதல் வகுப்பிற்கு மாலை 3-மணி வரை ரிஸர்வ் செய்யப்படும்

ரிஸர்வேஷன் சார்ஜ் டிக்கட் ஒன்றுக்கு அணா 0-5-6



# எல்லாவற்றையும் குறைவாக உபயோகியுங்கள்

## —உங்களுக்கும் உதவி செய்துகொண்டு —இந்தியாவிற்கும் உதவுங்கள்!



காகிதத்தை மிச்சப்படுத்தி, சிறு காகித துண்டுகளை உபயோகியுங்கள். பழைய கவர்களை (உறைகளைத்) திரும்ப உபயோகியுங்கள்

இந்தியாவின் ஏழைகளுக்காக உங்களது தேவைகளைக் குறைத்துக் கொள்ளுங்கள். சரக்குகளுக்கும் எல்லா வித சேவைகளுக்கும் பலமான நெருக்கடி இன்று ஏற்பட்டிருக்கிறது. யாருக்கும் அறிவே இல்லாமல் போய் விலையேறுவதைத் தடுக்க, ஒவ்வொருவரும் தானாகவே கொஞ்சம் தேவையைக் குறைத்துக் கொள்ளவேண்டும். இது நாட்டுப் பற்றுடையவரின் கடமை.

இப்படிப்பட்ட சிக்கனங்களை உங்களுக்குச் சாதகமாக்கிக்கொண்டு, அதன் லாபங்களை அனுபவியுங்கள். தேவைகளைக் குறைக்கும் ஒவ்வொரு செயலாலும் சிறு சிறு தொகைகள் மிச்சமாகும். அந்த மிச்சங்களின் பொருட்டு சிக்கனத்தைக் கையாளுங்கள்.



விருந்துகளைக் குறையுங்கள்



ஆகாரத்தை சிக்கனப்படுத்துங்கள்—அது ஒரு தேசிய கடமை



குழந்தைகளின் பழைய விளையாட்டுச் சாமான்களைப் பழுது பார்த்துக் கொடுங்கள். புதிதாக வாங்காதீர்கள்.



டிரங்க் டெலிபோனில் மூன்று நிமிஷத்திற்குக் குறைவாகப் பேசுங்கள்



நூலை வீணாக்காதீர்கள். அது கிடைப்பது அரிது விலையும் அதிகம்.



அதிவேக மிதமிஞ்சிய பாரம் ஏற்றியும் குறைவாக காற்றை அடித்தும் டயர்களைப் பாழாக்காதீர்கள்.

**பொருட்களை மிதமாகச் செலவிட்டு அவை தாராளமாகக் கிடைக்கும்படிச் செய்யுங்கள்**

**உங்களுக்கு இன்றியமையாதவை தவிர பிறவற்றை வாங்காதீர்கள்**

AAA 1

இந்திய அரசாங்க இ. கி. பி. இலாகா வெளியீடு.

## மதுரை விவாஹம்!



என் குமாரன் சிரஞ்சீவி எம். எஸ். தேவதாஸுக்கும் மதுரை ஸ்ரீ கே. எஸ். நாகசாமி அய்யரின் குமாரத்தி சௌபாக்யவதி தனலெக்ஷ்மிக்கும் சென்ற 25-5-45ம் தேதி மதுரையில் நடைபெற்ற விவாகத்தின் போது வாழ்த்துச் செய்திகளும், சன்மானங்களும் அனுப்பி வைத்த எண்ணிறந்த நண்பர்கள், பந்துக்கள் ஆகியோர்க்கு என் மனமார்ந்த வந்தனத்தை இதன் மூலம் தெரிவித்துக் கொள்வதுடன், அன்னவர்களுக்கு தனித் தனியாக பதிலளிக்க இடலாததற்காக அவர்களது மன்னிப்பைக் கோருகிறேன். சிரஞ்சீவி தேவதாவின் நண்பர்களுக்கு 10-6-45 தேதி மணீஸ் கபேயில் ஒரு தேநீர் விருந்து அளிக்கப்பட்டது.

எம். கே. சுந்தராமய்யர்,
புரோப்ரைட்டர், மக்கம் கம்பெனி
மஞ்சனக்காரத் தெரு : மதுரை
(ஹெட் ஆபீஸ்) 75, தங்கச்சாலை வீதி
பி. டி., மதராஸ்



மலர் 4 } தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 46

# என்ன சேதி?

## நியாயமில்லை

காங்கிரஸ் காரியக் கமிட்டித் தலைவர்கள் சென்ற வாரத்தில் விடுதலையடைந்து வெளியில் வந்தபோது அவர்களைப் பத்திரிகை நிருபர்கள் பேட்டி கண்டார்கள். ஒவ்வொருவரும் ஆரம்பத்தில் "காரியக் கமிட்டிதான் அபிப்பிராயம் சொல்ல உரிமை கொண்டது; காரியக் கமிட்டி கூடுவதற்கு முன்பு நான் ஒன்றும் சொல்வதற்கில்லை!" என்று பூர்வ பீடிகை போட்டுக் கொண்டு அப்புறம் சாங்கோபாங்கமாகப் பலவித அபிப்பிராயங்களை வெளியிட்டிருக்கிறார்கள். இதற்காகத் தலைவர்கள்மீது நாம் குறை கூறவில்லை. நமது சகோதரப் பத்திரிகைகளின் நிருபர்களைத்தான் குறை கூறுகிறோம். தலைவர்களுடன் ஏதாவது வாக்குக் கொடுத்து விவாதம் தொடங்கி அவர்களுடைய வாயிலிருந்து வார்த்தைகளைப் பிடுங்கிப் பத்திரிகை நிருபர்கள் வெளியிட்டுவிட்டால், அதற்கு நமது தலைவர்கள் என்ன செய்வார்கள்! அவர்கள் மேல் குறை சொல்லுவதில்தான் என்ன நியாயம் இருக்கிறது?

## ரொம்ப சந்தோஷம்

மேற்கண்டவாறு தலைவர்களுடைய அபிப்பிராயங்களைக் கூறுவதாக வெளியான செய்திகளுக்குள்ளே ஒரு செய்தி மிகவும் முக்கியமானது. அது, காங்கிரஸ் தலைவர் மௌலானா ஆஸாது அவர்கள் சட்டமறுப்பைக் குறித்து வெளியிட்டிருக்கும் அபிப்பிராயமே யாகும். "ஜப்பான் யுத்தம் முடியும் வரையில் பொதுஜனச் சட்டமறுப்பு இயக்கம் கிடையாது" என்று மௌலானா சாகிபு தெரியப்படுத்தியிருக்கிறார். 1942-ம் வருஷம் ஆகஸ்டு மாதத்தில் அகில இந்தியக் கமிட்டி கூடுவதற்குமுன்னால் இதே அபிப்பிராயத்தை நாம் பணிவுடன் தெரிவித்துக் கொண்டோம். "யுத்த காலத்தில் பொதுஜனச் சட்ட மறுப்பு இயக்கம் உதவாது. யுத்தத்தைக் காரணமாகச் சொல்லி சர்க்கார் மிகக் கடுமையான பயங்கர நடவடிக்கைகளை எடுத்துக் கொள்வார்கள். நமது ஜனங்களால் தாங்க முடியாது. உலக அபிப்பிராயமும் நமக்குச் சாதகமாய் இராது. ஆகையால் இயக்கம் வெற்றியடையாது. தீமைதான் விளையும்" என்று எடுத்துக்காட்டிப் பொதுஜனச் சட்டமறுப்புத் தீர்மானம் செய்ய வேண்டாமென்று அகில இந்தியக் கமிட்டியைக் கேட்டுக் கொண்டோம். பின் நடந்தவைகள் எல்லாம் நமது அபிப்பிராயத்தையே வற்புறுத்தின. கடைசியாக, இப்போது மௌலானா ஆஸாது அவர்களும் அதே அபிப்பிராயத்தை அதிகார பூர்வமாக வெளியிட்டிருக்கிறார்கள். ரொம்ப சந்தோஷம்.

## விடுதலை செய்க!

வேவல் திட்டத்தினால் வேறு நிரந்தரமான நன்மை உண்டாகப்போகிறதா என்பது ஒருபுறமிருக்க, ஏற்கெனவே இரண்டு நன்மைகள் ஏற்பட்டு விட்டன. ஒன்று, நமது மாபெருந் தலைவர்களின் விடுதலை; இரண்டாவது, மௌலானா ஆஸாதின் மேற்படி அபிப்பிராயம். இனிமேல், காங்கிரஸ் இயக்கச் சம்பந்தமாகவோ 1942 ஆகஸ்டு சம்பவங்கள் சம்பந்தமாகவோ சிறைப்படுத்தப்பட்ட எவரையும் சிறையில் வைத்திருக்க எவ்வித நியாயமும் இல்லையென்பதை வற்புறுத்துகிறோம். சிறைக் கதவுகள் உடனே திறக்கப்பட வேண்டும். நமது தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் ஸ்ரீ காமராஜ் முதலியவர்கள் இன்னும் சிறையில் இருக்கிறார்கள் என்பதை நினைக்கும்போது சர்வ சாந்த மூர்த்திகளுக்குக்கூட நெஞ்சு கொதிக்காமலிராது. உடனே அவர்கள் விடுதலை

செய்யப்பட வேண்டும். காங்கிரஸ் கமிட்டிகள், காங்கிரஸ் கொடிகள், காங்கிரஸ் கூட்டங்கள் முதலியவற்றின் மீது உள்ள சகலவிதமான தடைகளும் உடனே நீக்கப்பட வேண்டும். இதையெல்லாம் சென்னை அட்வைஸரி கவர்ன்மெண்டுக்குத்தான் சொல்கிறோம்.

### மலைக்காதீர்கள் !

நாளது ஜூலை 22, 23, 24 ஆகிய இந்த மூன்று தேதிகளும் அதற்கடுத்த நாலு தேதிகளும் ஆக ஒருவார காலம் இந்தியச் சரித்திரத்திலேயே மிகவும் முக்கியம் வாய்ந்ததாயிருக்கும்.

முதல் மூன்று தினங்களில் தமிழ்நாட்டுப் பொது ஜனங்கள் தங்களுடைய கவனத்தைத் திருச்சிராப்பள்ளிக் கடுத்த பொன்மலைப் பக்கமும் அதற்கடுத்த நாலு தினங்களில் ஸிம்லா மலைப் பக்கமும் செலுத்த வேண்டும்.

என்னத்திற்காக ஒரே அடியாய் இரண்டு மலைகளையும் கவனிக்கச் சொல்கிறோம் என்று நேயர்கள் சற்று மலைப்பதாய்த் தெரிகிறது.

ஸிம்லா மலையைக் கவனிக்க வேண்டியது அவசியம் என்பது அவர்களுக்குத் தெரிந்ததே. அதற்கு முன்னால் பொன்மலையையும் சற்று கவனிக்கச் சொல்லும் காரணம் இதுதான் :—

அங்கே நாளது ஜூலை 22, 23, 24உ ஆகிய மூன்று தினங்களிலும் ஒரு பிரமாண்டமான தொழிலாளர் மகாநாடு நடைபெறுகிறது. நாற்பத்திரண்டாயிரம் தென்னிந்திய ரயில்வேத் தொழிலாளர்களில் பெரும்பாலோர் அங்கே கூடப் போகிறார்கள்.

சாதாரணமாய்த் தொழிலாளர்கள் கூடினால் பஞ்சப்படி பாட்டைப் பாடிவிட்டு மகாநாடு வெற்றிகரமாய் நடந்துவிட்டதாகத் திருப்திப்பட்டுக்கொண்டு வீடு போய்ச் சேருவது வழக்கம். ஆனால் பொன்மலையில் கூடப்போகும் மகாநாடு அத்தகைய பஞ்சப்பாட்டு பாடும் பத்தாம் பசலி மகாநாடாயிராது. ரயில்வேத் தொழிலாளர்களின் நன்மைக்காக என்னென்ன காரியங்கள் செய்ய வேண்டுமோ அதையெல்லாம் நிறைவேற்றுவதுடன், ரயில்வேப் பிரயாணிகளின் சௌகரியத்திற்காகவும் போராடப் போகிறார்கள். ரயிலில் இடவசதி, ஸ்டேஷன்களில் சாப்பாட்டு வசதி, அதிகப்படி போக்கு வரத்துக் கோரிக்கை முதலிய முக்கிய காரியங்களையும் மேற்படி மகாநாடு கவனிக்கப் போகிறது.

இவ்வளவோடு இல்லை. இந்த ரயில்வேத் தொழிலாளர் மகாநாட்டார் தேசத்தின் முக்கிய அரசியல் பிரச்னைகளைப் பற்றியும் கவனம் செலுத்தித் தீர்மானம் செய்வார்களாம்.

வருங்காலத்தில் இந்த நாட்டை ஆளப் போகிறவர்கள் தொழிலாளர்கள்தான். தொழிலாளர்களுக்குள்ளேயும் ரயில்வேத் தொழிலாளர் அரசியலில் முக்கிய ஸ்தானத்தை வகிப்பார்கள் என்பது நிச்சயம். தண்டவாளம் இல்லாவிட்டால் ரயில் ஓடாது; ரயில் ஓடாவிட்டால் எந்தக் காரியமுமே ஓடாது. அப்படிப்பட்ட ரயிலை ஓட்டுகிற தொழிலாளர்களுக்குத் தேசத்தின் அரசியலில் யோசனை சொல்ல அருகதையில்லாவிட்டால், வேறு யாருக்கு உண்டு?

இவ்வளவு சிறப்பு வாய்ந்த ஒரு மகாநாடு பொன்மலையில் நடக்கும்போது நமது கவனம் அங்கே செலுத்தப்பட வேண்டியது அவசியந்தானே?

கடைசியாக ஒரு எச்சரிக்கை செய்துவிடுகிறோம். மகாநாட்டில் ரயில் இடநெருக்கடியைப் பற்றியெல்லாம் காரசாரமாகப் பேசப்படும் என்று எதிர்பார்க்கிறோம். ஆயினும் அப்படிப் பேசுகிறவர்களும் சரி, கேட்கிறவர்களும் சரி, ஊருக்குத் திரும்பிவர ரயிலில் முன் ஜாக்கிரதையாக இடவசதி செய்துகொள்ளும்படி கேட்டுக் கொள்கிறோம்.



*சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்கும் பரிசு பெற்றவர்: டி. ரங்கராஜன், முனிஸிபல் ஆபீஸ், மாயவரம்.*

# மேஜர் பகற் கனவு


தற்சமயம் பொது ஜனங்கள் தாங்கள் கொடுக்கும் வரிப்பணத்தின் கதியைப்பற்றிக் கதி கலங்குகிறார்கள்.


வேவல் திட்டத்தின் கீழோ நிதி நிர்வாகம் பொதுஜனத் தலைவர்கள் கையில் இருக்குமதலால் பொதுஜனங்கள் கவலையற்று இருப்பார்கள்.


தற்சமயம் சர்வதேச மகாநாடுகளுக்கு பிரிட்டனின் கையாளிகள் இந்தியாவின் பிரதிநிதிகளாகச் செல்கிறார்கள்.


வேவல் திட்டத்தின் கீழோ உண்மையான பொதுஜனத் தலைவர்கள் செல்வார்கள்.


தற்சமயம் பொது ஜனங்களைப் பயமுறுத்தும் போலீஸார்,.....


... அப்பொழுது பொதுஜனங்களுக்கு ஊழியர்களாக நடந்துகொள்வார்கள்.

-உம்மன்



தற்சமயம் தம் இஷ்டம்போல் விசேஷாதிகாரத்தை உபயோகப்படுத்தும் வைஸ்ராய்,....
விசேஷாதிகாரம்




அப்பொழுது பொதுஜனத்தலைவர்கள் நிர்வாகசபையில் இருப்பார்களாதலால் ஒரு தடவைக்கு இரண்டு தடவையாக யோசனை செய்வார்.




இப்பொழுது, வகுப்புச் சண்டையில் பொழுதுபோக்கும் தலைவர்கள்,....




அப்பொழுது ஒன்றுபட்டு சுயராஜ்யப் பாதையைச் செப்பனிடுவார்கள்.
சுய ராஜ்யம்




இப்பொழுதுள்ள கள்ளமார்க்கட்போன்ற ஒட்டடைகள்,




அப்பொழுது துடைத்துச் சுத்தம் செய்யப்படும்.

# ஸிம்லாவை நோக்குகிறோம்

சாக்ஷாத் கைலயங்கிரி என்பதாகவே எண்ணி ஸிம்லா மலையுச்சியைப் பய பக்தியுடன் நோக்குகிறோம். ஆவலுடன் நோக்குகிறோம். கவலையுடன் நோக்குகிறோம்.

எத்தனை எத்தனையோ தடவை பத்திரிகைகளில் 'ஸிம்லா' ஸ்தலத்தின் திருநாமம் அடிபட்டதுண்டு. ஸிம்லாவில் வீற்றிருந்து இந்தியாவை ஆளும் வெள்ளைத் தெய்வங்களைப் பற்றியும் அதிகார வர்க்கக் குட்டி தேவதைகளைப் பற்றியும் அவர்களுடைய லீலைகள் தர்பார்கள் முதலியவைகளைப் பற்றியும் பத்தி பத்தியாகப் பத்திரிகைகளில் செய்திகள் வந்ததுண்டு.

இன்னும் 'ஸிம்லா வட்டாரம்' என்று சொல்லப்படும் அதிசயமான மர்ம ஸ்தலத்தைப் பற்றியும் அடிக்கடி படித்திருக்கிறோம். அந்த வட்டாரத்திலிருந்து அவ்வப்போது கிளம்பும் அண்ட பகிரண்ட அபார பிரமாத புளுகுகளையும் படித்து இப்படியும் உண்டா என்று அதிசயித்திருக்கிறோம்.

ஆனபோதிலும் இதற்கு முன்னால் எந்தக் காலத்திலும் ஸிம்லா உள்ள திசையை நாம் இவ்வளவு ஆவலுடன் இவ்வளவு பரபரப்புடன் நோக்கியதில்லை.

நாற்பது கோடி இந்திய மக்களின் தலைவிதி அந்த மலை உச்சியில் நாளது ஜூன் மீ 25வ. கூடும் தலைவர்களின் மகாநாட்டில் நிர்ணயிக்கப்படப் போகிறது!

"ஸிம்லா மகாநாட்டில் நல்ல முடிவு ஏற்படட்டும்; நாட்டுக்கு நன்மையான முடிவு ஏற்படட்டும்; சமரசம் ஏற்படட்டும்; சுதந்திரம் உதயமாகட்டும்" என்று பிரார்த்திக்கிறோம்.

மும்மூர்த்திகளையும், முப்பத்து முக்கோடி தேவர்களையும், முஸ்லிம்களின் தெய்வமாகிய அல்லாஹுதஆலாவையும், கிறிஸ்துவர்களின் பரமண்டலத்திலுள்ள பிதாவையும், இன்னும் பூலோகத்திலும் வானுலகத்திலும் உள்ள எல்லாத் தெய்வங்களையும் (ஸிம்லாத் தெய்வங்கள் உள்பட) பிரார்த்தனை செய்கிறோம்.

வேவல் திட்டம் வெளியான சென்ற ஒரு வாரத்தில் வெகு பரபரப்புடனும் சுறுசுறுப்புடனும் பல காரியங்கள் தேசத்தில் நிகழ்ந்திருக்கின்றன. இவ்வளவு தீவிர வேகத்துடன் நம் நாட்டில் எந்த நாளிலும் அரசியல் காரியங்கள் நிகழ்ந்ததில்லையென்று சொல்லலாம்.

இதற்காக நாம் வைஸ்ராய் வேவலுக்கு நன்றி செலுத்த வேண்டும்.

வேவல் திட்டம் வெளியானவுடனே ஜனாப் ஜின்னா "மகாநாட்டை ஒத்திப் போட வேண்டும்!" என்று தந்தியடித்தார்.

"சரி; தொலைந்தது!" என்று எண்ணினோம். ஒத்திப் போட்டால் குட்டிச் சுவர்தான் என்பது நமக்குச் சர்வ நிச்சயமாயிருந்தது.

கிரிப்ஸ் திட்டம் வெளியானபோது நமது தலைவர்கள் சாவகாசமாகப் பதினைந்து நாள் கழித்துக் கூடியதும், ஓயாமல் வார்த்தை வார்த்தையாய் அலசி ஆராய்ந்து கொண்டிருந்ததும், நாளாக ஆகக் கொளறுபடிகேஷன்கள் அதிகமாகி வந்ததும், கடைசியில் எல்லாம் சர்வ குட்டிச்சுவராய்ப் போனதும் நமது ஞாபகத்தில் மறக்க முடியாதபடி நிலை பெற்றிருக்கின்றன வல்லவா?

எனவே, ஜனாப் ஜின்னாவின் ஒத்திப் போடும் பிரேரணையை வேவல் ஒத்துக் கொள்ளாமல் மறுத்தவுடன் நமக்கு மீண்டும் நம்பிக்கை பிறந்தது. "இது நல்ல சகுனம்!" என்று உற்சாகமும் உண்டாயிற்று.

இதற்குள்ளாக, அதே ஒத்திப் போடும் வேண்டுகோளை மகாத்மாவும் வேவலுக்கு அனுப்பியிருக்கிறார் என்று கேட்டதும், "ஐயோ!" என்று போய்விட்டது.

மகாத்மாவைச் சுற்றியுள்ளவர்கள் இவ்வளவு அழகான இராஜதந்திர யோசனை சொல்கிறவர்களாய் ஏற்பட்டிருக்கிறார்களே என்று வருந்தினோம்.

ராஜாஜியைப் பஞ்சகனியிலிருந்து எட்டயபுரத்துக்கு ஏன் வரவழைத்

தோம் என்றுகூடத் துக்கமாய்ப் போய் விட்டது!

நல்ல வேளையாக, மகாத்மாவின் ஒத்திப் போடும் யோசனையையும் லேவல் ஒப்புக்கொள்ளவில்லை. இதற்காக லேவலை மீண்டும் வாழ்த்துகிறோம்.

* * *

ஒத்திப் போடும் யோசனையை ஒப்புக்கொள்ளாத வைஸ்ராய் லேவல், மகாத்மாவின் இன்னொரு வேண்டுகோளை ஒப்புக்கொண்டார். அதாவது மௌலானா ஆஸாதையும் ஸிம்லா மகாநாட்டுக்கு அழைத்தார்.

இரண்டாவது நல்ல சகுனம் இது: மகத்தான நல்ல சகுனம் என்றும் சொல்லலாம்.

காங்கிரஸுக்குள்ளே யிருக்கும் தேசிய முஸ்லிம்களைக் கைவிடக் கூடாதென்பதில் மகாத்மா எவ்வளவு பிடிவாதம் உள்ளவர் என்பதை நாம் அறிவோம். எனவே, ஆஸாதைக் கூப்பிடாவிட்டால் ஸிம்லா மகாநாடே கூடாமல் போய்விடலாமென்று நினைத்தோம். அந்த விபத்தும் நேராமல் லேவல் தடுத்தார்.

* * *

இம்மாதிரி நல்ல சகுனங்கள் இரண்டு ஏற்படவே, பம்பாயில் 21உ நடந்த காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டத்துக்காகத் தேசத்தின் நாலா பக்கங்களிலிருந்தும் தலைவர்கள் விரைந்து சென்றார்கள். சிலர் ரயிலிலே சென்றார்கள். நமது ராஜாஜி உள்படச் சிலர் ஆகாச விமானத்திலும் போய்ச் சேர்ந்தார்கள்.

20உயும் 21உயும் பம்பாய் நகரம் ஓரே ஆனந்த உலகமாகக் காட்சியளித்தது. ஜனங்கள் சொல்ல முடியாத குதூகலத்தில் ஆழ்ந்திருந்தார்கள். தலைவர்களோ ஒரு நிமிஷங்கூட வீண் பொழுது போக்காமல் அதி தீவிரமாக ஆலோசனைகளைச் செய்தார்கள்.

கடைசியாக, நல்ல முடிவையும் செய்தார்கள்.

காங்கிரஸ் மகாசபையின் சார்பாக ஸிம்லா மகாநாட்டுக்கு வைஸ்ராயின் அழைப்பை ஒப்புக்கொண்டு மௌலானா ஆஸாது போகிறார்.

வைஸ்ராயின் அழைப்புப் பெற்ற மற்ற காங்கிரஸ் தலைவர்களையும் (மாகாண மாஜி மந்திரிகள் முதலியவர்களை) அவ்விதமே அழைப்பை ஒப்புக்கொண்டு ஸிம்லாவுக்கு வரும்படி கேட்டிருக்கிறார்.

இது மூன்றாவது நல்ல சகுனம்: ரொம்ப ரொம்ப நல்ல சகுனம்.

* * *

மேற்கண்டவாறு, மூன்று நல்ல சகுனங்களுடனே ஸிம்லாவில் நாளது 25உ கூடும் தலைவர்களின் மகாநாடானது நன்கு நடைபெற்று வெற்றியுடன் முடிய வேண்டுமென்று மீண்டும் பிரார்த்திக்கிறோம்.

நேயர்களையும் அவ்விதமே பிரார்த்திக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

எல்லாரும் சேர்ந்து பிரார்த்தனை செய்வதற்கு உரிய சந்தர்ப்பம் இது.

ஏனெனில், ஸிம்லாவில் கூடும் மகாநாடு வெற்றிபெற்றதானால் பாரத நாட்டின் சுதந்திரம் சர்வ நிச்சயமான விஷயமாகிவிடும்.

ஆனால், மகாநாடு வெற்றியடைவது அவ்வளவு சுலபமான விஷயம் என்று சொல்வதற்கில்லை.

இடையூறுகள் எத்தனையோ இருக்கின்றன.

முதல் முதலாக, ஜனாப் ஜின்னா இருக்கவே இருக்கிறார். ஏற்கனவே, அந்தக் கோபக்காரர், "21உ உங்களுடன் கலந்து பேசிய பிறகுதான் மகாநாட்டில் கலந்து கொள்வது பற்றிச் சொல்ல முடியும்" என்று வைஸ்ராய்க்குச் சொல்லியிருக்கிறார்.

இப்பொழுது மௌலானா ஆஸாதை வைஸ்ராய் அழைத்த காரணத்தினால் ஜனாப் ஜின்னாவுக்கு மூக்குக்கு மேல் கோபம் வந்திருக்கும்.

ஜனாப் ஜின்னா என்ன சொல்வாரோ, என்ன செய்வாரோ, யாரும் முன் கூட்டிச் சொல்ல முடியாது. மகாநாட்டைக் கெடுத்து விடுவதா யிருந்தால் அவரால் கெடுத்துவிட முடியும்.

அடுத்தபடியாக, 'சாதி - ஹிந்து' என்ற வார்த்தையும், 'சாதி ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் சமமான ஸ்தானங்கள்' என்ற ஏற்பாடும் பெரிய முட்டுக் கட்டைகளாக ஏற்பட்டிருக்கின்றன.

வைஸ்ராய் லேவலின் திட்டத்தின் 'சாதி-ஹிந்து' என்ற வார்த்தையைக் கண்டதும் நமக்குச் சொரேல் என்றது.

அதனாலேதான் நம் வரையிலாவது அந்த வார்த்தையை உபயோகிக்க வேண்டாமென்று 'ஹரிஜனங்கல்லாத ஹிந்துக்கள்' என்ற நீண்ட சொற்றொடரை உபயோகப்படுத்தினோம்!

அதனால் என்ன பிரயோஜனம்?

விஷமம் நடந்தது நடந்து விட்டது; விஷம் ஏறியது ஏறி விட்டது. அதை இறக்கியாக வேண்டும்.

இத்தனை காலம் ஏக இந்தியாவின் பிரதிநிதி ஸ்தாபனமாகவும், நாற்பது கோடி மக்களின் பொது உடைமையாகவும் இருந்து வரும் காங்கிரஸ் மகா சபையானது, இப்போது 'சாதி-ஹிந்து'க்களுக்கு மட்டும் பிரதிநிதி என்று ஒப்புக்கொள்ளும் நிலைமை ஏற்பட்டால் அது மிகவும் சங்கடமான விஷயந்தான்.

இந்தப் பெரும் தடையை விலக்குவதற்கு என்ன வழி என்று தேட வேண்டும். ஆனால் இராஜதந்திரத்துடன் தேடவேண்டும். எப்படியாவது மகாநாட்டை வெற்றி பெறச் செய்ய வேண்டுமென்ற திட உறுதியுடன் மேற்படி முட்டுக்கட்டையைப் போக்க வழி தேடவேண்டும்.

ஸிம்லா மகாநாடு வெற்றி பெற வேண்டுமென்பது நமது முதல் பிரார்த்தனை; முதன்மையான பிரார்த்தனை.

ஆனால் இந்த உலகத்தில் நாம் வெற்றிக்கும் தோல்விக்கும் எப்போதும் தயாராயிருக்கவேண்டியது அவசியம்.

அப்படி ஒருவேளை ஸிம்லா மகாநாடு தோல்வியடைவதாயிருக்கும் பட்சத்தில், அதன் குற்றம் காங்கிரஸ் தலைவர்களின் மீது விழக் கூடாது என்பது நமது இரண்டாவது பிரார்த்தனை.

ஸிம்லா மகாநாட்டை உடைத்துக் குட்டிச்சுவராக்கின குற்றம் வைஸராய் வேவல் தலையில் சுமரட்டும்; அல்லது ஜனாப் ஜின்னாவின் தலையில் விழட்டும்.

அந்தப் பொறுப்பு காங்கிரஸ் தலைவர்களின் தலையில் சுமரவேண்டாம்.

ஏற்கெனவே, கிரிப்ஸ் திட்டம் வந்த போது இது விஷயத்தில் நமது தலைவர்கள் அஜாக்கிரதையாயிருந்து விட்டார்கள். இதனால் தேசம் மிகுந்த கஷ்ட நஷ்டங்களை அடைந்தது. முக்கியமாக, உலக அபிப்பிராயமானது இந்தியாவின் சுதந்திரக் கோரிக்கைக்கு எவ்வளவு ஒத்தாசை செய்யக்கூடுமோ, அவ்வளவு செய்ய முடியவில்லை.

இந்தத் தடவையாவது அது விஷயத்தில் நமது தலைவர்கள் சர்வ ஜாக்கிரதையாயிருக்க வேண்டும்.

ஸிம்லா மகாநாடு முறிந்துபோனால், அதற்குப் பொறுப்பு காங்கிரஸ் தலைவர்கள் அல்ல என்பதை சர்வ நிச்சயமாக உலக அபிப்பிராயம் ஒப்புக்கொள்ள வேண்டும்.

ஆனால் இதெல்லாம் அவசியமில்லாமற் போகும்படியாக, ஸிம்லா மகாநாடு பூரண வெற்றியடையும் என்றும், நமது அரும் பெரும் தலைவர்கள் இந்தியாவின் அரசாங்கத்தை நடத்தும் நற்காலம் கூடிய சீக்கிரத்தில் உதயமாகும் என்றும் நம்புகிறோம்.

# படித்துப் பார்!

வெள்ளி நிலவை அள்ளிச் சொரிந்து கொண்டு நீலவானத்தில் உதயமாகும் பூரண சந்திரனைப் போல், "சந்திரோதயம்" என்னும் மாத மிருமுறைப் பத்திரிகை தமிழ்ப் பத்திரிகை வானத்தில் உதயமாகியிருக்கிறது.

ஏற்கெனவே இதே பெயருடன் வெளியாகி வந்த பத்திரிகையைப் பற்றி நேயர்கள் பலருக்கு ஞாபகம் இருக்கலாம். பெயர் அதுவே யானாலும், உருவ அமைப்பிலோ உள் விஷயங்களிலோ அதற்கும் இதற்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. முக்கியமாக, போட்டிப் பந்தயம் கிடையாது.

வெள்ளிமயமாக ஜொலிக்கும் வெளி அட்டையில், "தமிழர்களுக்குத் தமிழ் இசை என்ற ஒரு விழிப்பு ஏற்படுத்தித் தந்த" ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களின் கம்பீர உருவம் கரு நாயகமாக விளங்குகிறது.

உள்ளே, தமிழ் நாட்டின் சிறந்த சிறு கதை எழுத்தாளர்களான ஸ்ரீ. பி. எஸ். ராமையா, ஸ்ரீ கு. சிதம்பர சுப்பிரமண்யம் முதலியவர்களின் கதைகள்—கட்டுரைகள் வெளிவந்துள்ளன.

இந்தப் புத்துயிர் கொண்ட "சந்திரோதய"த்தின் பத்திரிகாசிரியர் ஸ்ரீ க. நா. சுப்பிரமணியம் என்றால், பத்திரிகையின் மற்ற விஷயங்கள் எவ்வளவு உயர்தரமாயிருக்குமென்று சொல்ல வேண்டியதில்லை.

அச்சிலும் அமைப்பிலும் தமிழ் நாட்டில் இதுகாறும் வெளியான எந்தப் பத்திரிகையையும் இது தோற்கடித்து விடுகிறது.

பாரதியார் ஞாபகச் சின்னத்துக்கு அஸ்திவார விழா நடந்த மாதத்தில், ஸ்ரீ பாரதி விழாவை முதல் விஷயமாகக் கொண்டு வெளியாகியிருக்கும் இந்தப் புதிய "சந்திரோதயம்" தமிழ் மக்களின் உள்ளத்தில் பாரதியார் ஞாபகம் உள்ளவரையில் சிறந்த இலக்கியப் பத்திரிகையாக நின்று நிலவுவதாக!

# சுயம்வர முகூர்த்தம்




இதனால் சகல கனதனவான்களுக்கும் அ. இ. ரேடியோ மூலம் நான் அறிவித்துக் கொள்வது என்னவென்றால், ஸ்ரீ ஜான்புல் பெருமான் திருவருளை முன்னிட்டு நிகழும் பார்த்திப ஞு ஆனி மீ 12உ (25—6—45) உதயாதி நாழிகை 10-30க்கு மேல் 11-30 மணிக்குள்ளாக கன்யா லக்னம் கூடிய சுபயோக சுப தினத்தில்.

| இந்திய மக்களின் செல்வக் குமாரர்களான | எனது அருந்தவப் புதல்வியாகிய |
|---|---|
| தேசத் தலைவர்களுக்கு | ஸ்ரீமதி வேவல் திட்டத்தை |

சுயம்வர மண்டபத்தில் நிறுத்திக் கன்னிகாதானம் செய்து கொடுப்பதாகப் பெரியோர்களால் இங்கிலாந்தில் தேம்ஸ் நதி தீரத்தில் நிச்சயிக்கப்பட்டு மேற்படி சுப முகூர்த்தம் சிம்லா மலை உச்சியில் நடைபெறும். அதுசமயம் பொதுஜனமாகிய தாங்கள் தங்களுடைய பந்து மித்ர பரிவாரங்களுடன் முன்னதாக முகூர்த்தத்துக்கு ரயில் ஏறி வந்து இட நெருக்கடியை ஏற்படுத்தி உபத்திரவம் செய்யாமலிருக்கும்படியும், தம்பதிகளை அவரவர்கள் இருக்கும் இடத்திலேயே அமைதியாக இருந்து மானசீகமாய் ஆசீர்வதிக்கும்படியும் அதிகார தோரணையுடன் விநயபூர்வமாய்க் கேட்டுக் கொள்கிறேன். பல நாள் முகூர்த்தம்.

டெல்லி
15—6—45

இப்படிக்குத் தங்கள் விதேயன்,
வைஸராய் வேவல் துரை.

தங்கள் வரவை ஆவலுடன் எதிர்பார்க்கும்:— வின்ஸ்டன் சர்ச்சில், லியோ பால்ட் அமெரி

## வேவல் கடிதம்—1

மிஸ்டர் காந்தி அவர்களுக்கு,

என்னுடைய கனிஷ்ட குமாரத்தி மிஸ். வேவல் திட்டம் சுயம்வரத்தைப் பற்றி 15-6-45 அன்று 7-45 மணிக்கு அ. இ. ரே. மூலம் நான் படித்த அழைப்பிதழைக் கேள்விப்பட்டிருக்கலாம். மேற்படி சுயம்வர விஷயமாகத் தங்களையும் ஜனாப் ஜின்னா அவர்களையும் சுயம்வரத்தின் முதல் நாள் 24-6-45 அன்று நேரில் கலந்து பேச விரும்புகிறேன். இது விஷயத்தில் தங்களுடைய பரிபூரண ஒத்தாசையை எதிர்பார்க்கிறேன்.

சிம்லாவில் சுயம்வரம் ஏற்படுத்தி என் குமாரத்திக்குப் பதின்மூன்று மாப்பிள்ளைகளைத் தேர்ந்தெடுக்க விரும்புகிறேன். என்ன சிரிக்கிறீர்கள்? பாரத யுத்த காலத்தில் திரௌபதிக்கு ஐந்து புருஷர்கள் இருந்ததில்லையா? இந்தக் கலியுக சுயராஜ்யப் போராட்ட காலத்தில் மிஸ் வேவல் திட்டத்துக்குப் பதின்மூன்று புருஷர்களாயிருந்து விட்டுப் போகட்டுமே என்றுதான் இந்த ஏற்பாடு செய்திருக்கிறேன். இந்த மாப்பிள்ளைகளில் ஜாதி ஹிந்துக்கள் ஐந்து பேர்; முஸ்லிம்கள் ஐந்து பேர்; இதர மாப்பிள்ளைகள் மூன்று பேர். சுயம்வர முகூர்த்தத்திற்குக் காங்கிரஸ்—முஸ்லிம் லீக் தலைவர்களுக்கும், பிரதம மந்திரிகளுக்கும், மாஜி பிரதம மந்திரிகளுக்கும் மற்ற இதர முக்கிய அரசியல் கட்சித் தலைவர்களுக்கும் அழைப்பிதழ் அனுப்பியிருக்கிறேன். தாங்களும் ஜனாப் ஜின்னாவும் 25உயன்று சிம்லாவுக்கு வந்து பெண்ணைப் பார்த்து அங்கீகரித்து விட்டால் மாப்பிள்ளைகளைத் தேர்ந்தெடுக்கும் கவலையும், விவாகமான பிறகு பெண்ணின் தற்காப்பு விஷயமும் என்னுடைய சொந்தப் பொறுப்பாயிருக்கும்.

இப்படிக்குத் தங்கள்,
வேவல்.

## காந்திஜி கடிதம்—1

அன்புள்ள வேவல் துரைக்கு,

தங்கள் அன்பான அழைப்பிதழ் கிடைத்தது. பெண் சிவப்பா, கறுப்பா, சீர் செனத்தி என்ன செய்வீர்கள் என்பது பற்றியெல்லாம் காரியக் கமிட்டி அங்கத்தினர்கள் கூடி ஆலோசிக்க வேண்டிய விஷயம். இதற்குப் போதிய அவகாசம் இல்லாததால் முகூர்த்தத் தேதியை ஒத்திப் போட முடியுமா? இரண்டாவது, தங்கள் பெண்ணிடம் சுதந்திர உணர்ச்சி என்பது சிறிதளவும் காணோம். சுயம்வரம் என்று வைத்துவிட்டு மாப்பிள்ளையைத் தாங்களே

தேர்ந்தெடுத்து விட்டால் அப்போது பெண்ணுக்குச் சுதந்திரம் இல்லை என்றுதானே பொருள்? மூன்றாவது, பதின்மூன்று மாப்பிள்ளைகளுக்கு உதாரணமாக 'மகாபாரதப் போர்க்காலத்தில் பஞ்சபாண்டவர்கள் திரௌபதியை மணம் புரியவில்லையா?' என்று கேட்டிருக்கிறீர்கள். வாஸ்தவம்; ஒப்புக் கொள்கிறேன். ஆனால் பஞ்சபாண்டவர்கள் ஐவரும் சகோதரர்களாயிருந்ததால் மணம் புரிந்து கொண்டார்கள். ஆனால் நீங்கள் சொல்லும் பதின்மூவரில் ஜாதி ஹிந்து ஐந்து பேர், முஸ்லிம்கள் ஐந்துபேர், மற்ற இதர வகுப்புக்காரர்கள் மூன்று பேர் என்று சகோதர பாவம் சிறிதுமில்லாத வகுப்புவாரி வித்தியாசத்தை எதற்காகப் புகுத்துகிறீர்கள்? இந்த வித்தியாசம் இருந்தால் முகூர்த்தம் நடப்பது சிரமமான காரியம்.

நாலாவதாக, சுயம்வர முகூர்த்தத்திற்கு முக்கியமாகக் காங்கிரஸ் தலைவரான அபுல்கலாம் ஆஸாதுக்கு அழைப்பு அனுப்பவில்லை. இது பருப்பில்லாமல் நடக்கும் கல்யாணத்தைப்போல் இருக்கிறது.

இப்படிக்கு,
எம். கே. காந்தி.

## வேவல் கடிதம்—2.

மிஸ்டர் காந்தி அவர்களுக்கு,

தங்கள் கடிதம் கிடைத்தது. ஆனிமீ முடிந்து ஆடிமாதம் வந்து விடுவதால் பிற்பாடு இவ்வளவு பொருத்தமான முகூர்த்த தினம் கிடைப்பது அரிது. ஆகையால் முகூர்த்தத் தேதியை ஒத்தி வைப்பது சாத்தியமில்லை. 24ஆமே தங்களைச் சந்திக்க விரும்புகிறேன். ஜனாப் ஜின்னா அவர்களும் முகூர்த்தத் தேதியைத் தள்ளி வைக்கும்படிதான் கேட்டிருக்கிறார். அவருக்கும் முடியாது என்று தந்தி கொடுத்துவிட்டேன். சம்பந்திகளுக்கு ஜாகை வசதி சரிவரச் செய்யப்பட்டிருக்கிறது. சிம்லாவில் இட வசதிக்கெல்லாம் ஏற்பாடு செய்திருக்கிறேன். அவசியம் வந்து சேரவும் பெண் விஷயமாக இருந்தாலோ மாறுதல்களோ இருந்தால் சுயம்வர மண்டபத்திலேயே பேசித் தீர்த்துக் கொள்ளலாம்.

இப்படிக்கு,
வேவல்.

முக்கிய குறிப்பு:—பருப்பு இல்லாத கலியாணம் என்ற அபவாதம் ஏற்படாமலிருக்கும் பொருட்டு மௌலானா ஆஸாதுக்கு அழைப்பு அனுப்பி விட்டேன். இது விஷயத்தை ஞாபகப் படுத்தியதற்கு வந்தனம்.

★ நாடெங்கும் பலர் நமது தேசத் தலைவர்களை வெறும் வசன நடையில் கேட்டுக் கொள்வதற்குப் பக்க பலமாக, மோனை எதுகையுடன் வேண்டிக் கொள்ளும் விண்ணப்பம்:

# மறக்க வேண்டாம்!

க. ரா.

வேவல் லண்டன் சென்று வந்தார்
ஜேபில் ஏதோ கொண்டு வந்தார்
ஆவல் தேச மக்களிடம்
அதிகமாகப் பெருகினதால்

திட்டமொன்று வைஸராயும்
தெரியப் படுத்தி விட்டாரே!
"மட்டம்" என்று அதைத் தள்ளி
மறக்க வேண்டாம் தலைவர்களே!

தள்ளி விட்டுப் போய்விட்டால்
தடுப்பார் யாரும் இல்லாமல்
வெள்ளைக் கவர்னர் ஆட்சிதலை
விரித்தே ஆடும் நம்நாட்டில்

இருநூ றாண்டாய் இந்தியாவில்
இருந்து பிழைத்து ருசிகண்டோர்
ஒருநாள் ஒன்றும் சொல்லாமல்
ஓடிப் போவார் எனநம்பி,

கையைக் கட்டிக் கொண்டிருந்தால்
கடையைக் கட்டிப் போவா ரோ?
பையப் பையப் பலம்பெற்றுப்
பற்றுவ தன்றோ சுயராஜ்யம்?

'கொடுப்பேன்' என்று சொல்லுவது
குறைவா கத்தான் இருந்தாலும்
இடத்தை எட்டிப் பிடித்துவிட்டால்
மடத்தைப் பிடிக்க மாட்டோமோ?

பசியும் நோயும் தலைகாட்டாப்
படிக்கு ஆட்சி வகுத்திடலாம்
நசியும் தேச பக்திதனைக்
கடல்போல் பெருகச் செய்திடலாம்

கல்வி முறையை மாற்றிடலாம்
கலைகள் செழித்து ஓங்கிடவே,
செல்வ நிலையைச் சீர்திருத்திச்
சிறந்த வாழ்க்கை அமைத்திடலாம்

உடம்பில் வன்மை ஊட்டிடலாம்
உயிரில் வீரம் செலுத்திடலாம்
கிடந்த மக்கள் வீறுடனே
கிளர்ச்சி செய்யச் செய்திடலாம்

ஒன்றாய்ச் சேர்ந்த பலத்தோடே
உறுதி யாய்நாம் நின்றிட்டால்
அன்றே அன்னியன் போய்விடுவான்
அதுவே யன்றோ சுயராஜ்யம்?

# சிவகாமியின் சபதம்



### அத்தியாயம் 27

## வெற்றி வீரர்

சோழ நாட்டைச் சேர்ந்த திருவெண்காடு என்னும் கிராமம் திமிலோகப்பட்டுக் கொண்டிருந்தது. அந்தக் கிராம வாசிகள் கனவிலும் எதிர்பாராத அதிர்ஷ்டம் அன்று அவர்களுக்குக் கிட்டுவதாக இருந்தது.

பல்லவ சாம்ராஜ்யத்தின் குமார சக்கரவர்த்தி நரசிம்ம வர்மர் அன்று அந்தக் கிராமத்துக்கு விஜயம் செய்யப் போகிறார். தமது ஆருயிர்த் தோழரும் வீர தளபதியுமான பரஞ்சோதியையும் அழைத்து வரப் போகிறார் என்னும் செய்தி வந்ததிலிருந்து அந்த ஊர்க்காரர்கள் யாரும் பூமியிலேயே நிற்கவில்லை.

இரண்டு நாளைக்கு முன்புதான் பாண்டிய சைன்யத்துக்கும் பல்லவ சைன்யத்துக்கும் கொள்ளிடக் கரையில் நடந்த பெரும் போரைப் பற்றி அந்தக் கிராமவாசிகள் கேள்விப்பட்டிருந்தார்கள். பாண்டியன் செயந்த வர்மன் தோல்வியடைந்து புற முதுகிட்டு ஓடியதைப் பற்றியும் அறிந்திருந்தார்கள். அந்த யுத்தத்தின் காரணமாக, கொள்ளிட நதியின் தண்ணீர்ப் பிரவாகம் இரத்த வெள்ளமாக மாறி ஓடியதை நேரில் பார்த்தவர்கள் வந்து அவர்களுக்குத் தெரிவித்திருந்தார்கள். பாண்டிய சைன்யம் பல்லவ சைன்யத்தைவிடப் பெரியது என்பதும், மாமல்லர், பரஞ்சோதி இவர்களின் வீர சாகசச் செயல்களினாலேயே பாண்டிய சைன்யம் தோல்வியடைந்து சிதறி ஓடியது என்பதும் எல்லாரும் அறிந்த பிரசித்தமான விஷயங்களாயிருந்தன.

அப்பேர்ப்பட்ட வீராதி வீரர்கள் எங்கேயோ ஒரு மூலையிலுள்ள இந்தக் குக்கிராமத்துக்கு வருகிறார்கள் என்றால், அந்தக் கிராமவாசிகள் தலை தெரியாத ஆனந்தத்தில் மூழ்கியிருந்ததில் வியப்பு ஒன்றும் இல்லையல்லவா?

ஏற்கெனவே அந்தக் கிராமவாசிகளுக்கு இன்னொரு வகை அதிர்ஷ்டம் கைகூடியிருந்தது. பத்து தினங்களுக்கு முன்பு ஸ்ரீ திருநாவுக்கரசர் பெருமான் அவ்வூருக்கு விஜயம் செய்து சைவத் திருமடத்தில் எழுந்தருளியிருந்தார். ஆலயப் பிராகாரங்களில் அப்பெரியார் தமது திருக்கையினால் புல் செதுக்கும் திருப்பணியை நடத்தியதுடன், மாலை நேரங்களில் ஆலய மண்டபத்தில் தமது தேனிசைப் பாசுரங்களைச் சீடர்களைக் கொண்டு பாடுவித்து வந்தார்.

இவ்விதம் சிவானந்தத்திலும் தமிழின்பத்திலும் ஆழ்ந்திருந்தவர்களுக்கு, சக்கரவர்த்தித் திருக்குமாரரும் அவருடைய வீர தளபதியும் வரப்போகும் செய்தி மேலும் குதூகலத்தை உண்டாக்கிற்று. அந்தச் சைவப் பெருந்தகையார் தங்கள் கிராமத்தில் அடிவைத்த முகூர்த்தத்தினால்தான் இந்தக் கிடைக்கொணாப் பெரும் பேறும் கிடைப்பதாக அவர்கள் எண்ணினார்கள். திருநாவுக்கரசரைத் தரிசிப்பதற்காகவே மாமல்லரும் பரஞ்சோதியும் அங்கு வருவதாக ஒரு வதந்தியும் பரவியிருந்தது.

கல்கி

ஆனால் நமசிவாய வைத்தியர் வீட்டைச் சேர்ந்தவர்களுக்கு



மட்டும் உண்மையில் அவர்கள் வருகிற காரணம் இன்னதென்று தெரிந்திருந்தது. பரஞ்சோதியின் அருமைத் தாயார் அந்த வீட்டிலேதான் இருந்தாள். பரஞ்சோதிக்கு வாழ்க்கைப் படுவதற்காகக் காத்திருந்த பெண்ணும் அந்த வீட்டிலேதான் இருந்தாள். அப்படியிருக்கும்போது, தளபதி பரஞ்சோதியும் அவருடைய தோழரும் திருவெண்காட்டுக்கு வருவதற்கு வேறு காரணம் எதற்காகத் தேட வேண்டும்?

எனவே அந்தக் கிராமத்தில் மற்ற எந்த வீட்டையும்விட நமசிவாய வைத்தியரின் வீட்டிலேதான் குதூகலமும் பரபரப்பும் அதிகமாயிருந்ததென்று சொல்ல வேண்டியதில்லையல்லவா?

பரஞ்சோதியின் அன்னை கண்ணீரும் கம்பலையுமாய்த் தன் ஏக புத்திரனை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

சாதாரணமாய்ச் சாந்த நிலையில் இருப்பவரான நமசிவாய வைத்தியர் அன்று வீட்டுக்குள்ளிருந்து வெளியிலும் வெளியிலிருந்து உள்ளேயும் நூறு தடவை போய் வந்து கொண்டிருந்தார். அவருடைய மனையாள் தன் மகள் உமையாளை ஆடை ஆபரணங்களால் அலங்கரிப்பதில் அன்று காட்டிய சிரத்தை அதற்குமுன் எப்போதும் காட்டியதில்லை. உமை



யாளின் தம்பி தங்கைகள் அவளைப் பரிகாசம் செய்வதில் ரொம்பவும் தீவிரமாயிருந்தார்கள். உமையாளின் உள்ளமோ, பெரும் புயல் அடிக்கும்போது கொந்தளித்து அலை வீசும் கடலை ஒத்திருந்தது.

* * *

இங்கு இப்படி இருக்க, அங்கே அதாவது திருவெண்காட்டுக்கு ஒரு யோசனை தூரத்தில் வந்து கொண்டிருந்த மாமல்லர், பரஞ்சோதி இவர்களுக்குள் மாமல்லரிடமே உற்சாகம் அதிகம் காணப்பட்டது. பரஞ்சோதியின் முகத்தில் சோர்வு அதிகமாயிருந்ததுடன் அவருடைய குதிரை அடிக்கடி பின்னால் தங்கியது. அவரை மாமல்லர் அவ்வப்போது பரிகாசம் செய்து விரைவுபடுத்தினார். "இது என்ன தளபதி! உம்முடைய குதிரை ஏன் இப்படிப் பின்வாங்குகிறது? உம்முடைய அவசரம் அதற்குத் தெரியவில்லையா, என்ன? குதிரையை வேணுமானால் மாற்றிக் கொள்ளலாமா?" என்றும், "உம்முடைய முகம் ஏன் இவ்வளவு பிரகாசமாயிருக்கிறது? இதென்ன, நீர் உம்முடைய காதலியைக் காணப் போகிறீரா? அல்லது கொலைக் களத்துக்குப் போகிறீரா? ஏன் இவ்வளவு பயம்? பயப்படாதீர்! நான் நல்ல வார்த்தை சொல்லி உமையாள் உம்மை

அதிகமாகக் கண்டிக்காமல் பார்த்துக் கொள்கிறேன்" என்றும் இம்மாதிரியெல்லாம் கேலி செய்தார். பொறுத்துப் பொறுத்துப் பார்த்துக் கடைசியில் பரஞ்சோதியால் பொறுக்க முடியாமல் போகவே அவர் கூறியதாவது :—"ஐயா! என்னுடைய மனநிலையை அறிந்து கொள்ளாமல் புண்ணில் கோலிடுவது போல் பேசுகிறீர்கள். உண்மையாகவே எனக்கு இங்கு வருவதற்கு இஷ்டம் இல்லை. நீங்கள் வற்புறுத்தியபோது இணங்கி விட்டேன். ஏன் இணங்கினேன் என்று இப்போது வருத்தமாயிருக்கிறது. உங்களுக்குப் புண்ணியமாய்ப் போகட்டும். இப்போதாவது நான் திரும்பிப் போவதற்கு அனுமதி கொடுங்கள். தாங்கள் எனக்காகச் சென்று என் தாயாரைப் பார்த்து 'நான் சௌக்கியமாயிருக்கிறேன்; ஆனால் அவருக்கு நான் கொடுத்த வாக்கை நிறைவேற்ற முடியவில்லை. ஆகையால் அவரைப் பார்க்க வெட்கப்பட்டுக்கொண்டு வராமல் நின்று விட்டேன்' என்று சொல்லி விடுங்கள்!"

இவ்விதம் உணர்ச்சி ததும்பிய குரலில் பரஞ்சோதி கூறியதைக் கேட்டு மாமல்லர் சிறிது திடுக்கிட்டார். "தளபதி! உம்முடைய தாயாருக்கு நீர் என்ன வாக்குறுதி கொடுத்தீர்? அதை ஏன் நிறைவேற்ற முடியவில்லை?" என்று கவலை கொண்ட குரலில் வினவினார்.

"பிரபு! எதற்காக நான் பிறந்த ஊரையும் வீட்டையும் விட்டுக் கிளம்பினேன் என்று தங்களுக்குச் சொன்னேனே, அது ஞாபகமில்லையா? என்னுடைய மாமன் நமசிவாய வைத்தியர் தம்முடைய மகளை — கல்வி கேள்விகளில் சிறந்த உமையாளை — நிரட்சரகுட்சியான எனக்குக் கட்டிக் கொடுக்கப் பிரியப்படவில்லை. அதற்காக, கல்வியிற் கரையிலாத காஞ்சிமா நகருக்குப் போய் வாகீசப் பெருமானின் திருமடத்தில் சேர்ந்து படித்துச் சகலகலா வல்லவனாகத் திரும்பி வரும் எண்ணத்துடன் புறப்பட்டேன். ஆனால், நடந்தது என்ன? போனது போலவே நிரட்சரகுட்சியாகத் திரும்பி வந்திருக்கிறேன். திருநாவுக்கரசர் பெருமானைக் கண்ணாலே கூடப் பார்க்கவில்லை......" என்று பரஞ்சோதி சொல்லி வந்தபோது, நரசிம்ம வர்மர் கலகலவென்று சிரித்தார். "பல்லவ குமாரா! உங்களுடைய சிரிப்பு என் உள்ளத்தில் நெருப்பாய் எரிகிறது! வடக்குப் போர் முனையிலிருந்து சக்கரவர்த்தி என்னைத் தங்களிடம் அனுப்பியபோது, தாங்கள் கற்ற கல்வியில் கொஞ்சம் எனக்கும் கற்பிக்கும்படியாகச் சொல்லியனுப்பினார்! ஆனால் தாங்கள் என்ன செய்தீர்கள்? எனக்குக் கல்வி கற்பிக்கவும் இல்லை; நானாக ஏட்டைக் கையில் எடுப்பதற்கும் விடவில்லை. எப்போதாவது சிறிது நேரம் கிடைத்தால், அந்த நேரத்தில ஆயனரின் குமாரியைப் பற்றிப் பேசிப் பொழுது போக்கி விட்டீர்கள்! ஆ! இராஜ குலத்தினரைப் போல் சுயநலக்காரரை நான் கண்டதில்லை!" என்று சோகம் ததும்பிய குரலில் பரஞ்சோதி சொல்ல, அதைக் கேட்ட குமார சக்கரவர்த்தி இன்னும் உரத்த சத்தத்துடன் இடியிடியென்று சிரித்தார்.

* * *

மாமல்லரும் பரஞ்சோதியும் திருவெண்காட்டை அடைந்தபோது கிராமத்தின் முகப்பில் அவர்களுக்குப் பிரமாதமான வரவேற்புக் காத்திருந்தது. அப்போது மாமல்லருக்கு முன்னொரு நாள் இதேமாதிரி மண்டபப்பட்டுக் கிராமத்தில் நிகழ்ந்த வரவேற்புக் காட்சியும், அன்று ஆயனரும் சிவகாமியும் முக்கியமாக வரவேற்புக்குரியவர்களாக இருந்ததும், தம்மை இன்னாரென்று தெரிவித்துக் கொள்ளாமல் அவர்களைப் பின்தொடர்ந்து சென்றதும் ஞாபகம் வந்தன.

ஆஹா! அதற்குப் பிறகு எத்தனை எத்தனை சம்பவங்கள் நிகழ்ந்து விட்டன!...இதற்குள்ளாகக் கண்ணபிரான் மண்டபப்பட்டுக் கிராமத்துக்குச் சென்று, கொள்ளிடக் கரைச் சண்டையைப் பற்றியும், பாண்டியன் புறமுதுகிட்டு ஓடியதைப் பற்றியும் சொல்லியிருப்பான். சிவகாமி எவ்வளவு மகிழ்ச்சியடைந்திருப்பாள்! எவ்வளவு ஆர்வத்துடன் தம்முடைய வருகையை எதிர்பார்த்துக்கொண்டிருப்பாள்? ஆ! நாளை

நின்று மறுநாள் அவனைச் சந்திக்கப் போகிறோமல்லவா? இந்தத் தடவை அவனும் மற்றக் கிராமவாசிகளுடனே வந்து தம்மை வரவேற்பானா? அல்லது சங்கோசப்பட்டுக் கொண்டு மடத்திலேயே தங்கி இருப்பானா?...

மாமல்லர் இத்தகைய மனோராஜ்யப் பகற்கனவுகளில் ஈடுபட்டிருந்த சமயத்தில்,

“குமார சக்கரவர்த்தி நரசிம்ம பல்லவேந்திரர் வாழ்க!”

“கங்க மன்னனையும் மதுரைப் பாண்டியனையும் போரில் புறங்கண்ட வீர மாமல்லர் வாழ்க!”

“சோழநாட்டு வீராதி வீரர் தளபதி பரஞ்சோதி வாழ்க!” என்பது போன்ற ஆகாசமளாவிய கோஷங்கள் அவருடைய பகற் கனவுகளைக் கலைத்துத் தாம் திருவெண்காட்டுக் கிராமத்துக்கு வந்துவிட்டதைத் தெரியப்படுத்தின.

## அத்தியாயம் 28

# பட்டிக்காட்டுப் பெண்

வரவேற்பு வைபவங்கள், ஊர்வலங்கள் எல்லாம் முடிந்த பிறகு நமசிவாய வைத்தியரின் வீட்டுக்குள்ளே மாமல்லரும் பரஞ்சோதியும் பிரவேசித்தார்கள்.

பல்லவ சாம்ராஜ்யத்தின் குமார சக்கரவர்த்தி திடீரென்று தங்கள் சின்னஞ் சிறு இல்லத்துக்குள் பிரவேசிக்கவே, அந்த வீட்டாரெல்லோரும் இன்னது செய்வதென்று தெரியாமல் திகைத்து நின்றார்கள். தளபதிக்குரிய வீர உடை தரித்திருந்த காரணத்தினால் பரஞ்சோதியை நிமிர்ந்து பார்த்துப் பேசக்கூட அவர்களுக்குச் சங்கோசமாயிருந்தது. பரஞ்சோதிக்கோ அதைவிடச் சங்கோசமாயிருந்தது. கூடத்தில் போட்டிருந்த ஆசனம் ஒன்றில் யாரும் சொல்லாமல் தாமே மாமல்லர் உட்கார்ந்து கொண்டு சுற்று முற்றும் பார்த்தார். நிலைமையை ஒருவாறு அறிந்து கொண்டார்.

கண்களில் கண்ணீர் ததும்ப நின்ற மூதாட்டிதான் பரஞ்சோதியின் தாயார் என்று ஊகித்துத் தெரிந்து கொண்டு, “அம்மா! பரஞ்சோதியைப் போன்ற வீர மகனைப் பெற்ற பாக்கியசாலியான தாயைத் தரிசிக்க வேண்டும் என்று எனக்கு எவ்வளவோ ஆவலாயிருந்தது அந்த பாக்கியம் இன்று கிட்டிற்று!” என்று சொல்லி விட்டு, பரஞ்சோதியைப் பார்த்து, “தளபதி! இது என்ன? தாயாருக்கு நமஸ்காரம் செய்யும். தொண்டை மண்டலத்துக்குப் போனதினால் மட்டு மரியாதைகூட மறந்து போய்விட்டதென்றல்லவா நாளைக்கு, எல்லாரும் குறை சொல்லுவார்கள்?” என்றார்.

உடனே பரஞ்சோதி முன்னால் சென்று தாயாரின் பாதங்களில் நமஸ்காரம் செய்தார். நமஸ்கரித்த குமாரனை வாரி எடுத்து உச்சி முகர வேண்டுமென்ற ஆசை அந்த அம்மாளுக்கு எவ்வளவோ இருந்தது. ஆனால் குமார சக்கரவர்த்தி அங்கு வீற்றிருந்ததும், தன் குமாரன் போர்க்கோல உடை தரித்திருந்ததும் அவளுக்குத் தயக்கத்தை உண்டு பண்ணிற்று. பிறகு, பரஞ்சோதி நமசிவாய வைத்தியருக்கும் நமஸ்காரம் செய்து விட்டுத் திரும்பி வந்து மாமல்லரின் பக்கத்திலே அமர்ந்து உச்சிமோட்டைப் பார்த்தான்.

அப்போது நமசிவாய வைத்தியர், மாமல்லரைப் பார்த்து, தட்டுத் தடுமாறி, “இந்தக் குடிசைக்குத் தாங்கள் வந்தது எங்களுடைய பாக்கியம்!” என்றார்.

மாமல்லர் அவரை நோக்கி, “ஓகோ! நமசிவாய வைத்தியர் என்பது நீங்கள்தானா? உங்களுக்கு ஒரு எச்சரிக்கை செய்ய விரும்புகிறேன். உங்கள் குமாரி என் சிநேகிதரை ரொம்பவும் பயப்படுத்தி வைத்திருக்கிறாள் போலிருக்கிறது. அதோ, அந்தக் கதவண்டை நிற்பதுதானே உங்கள் புதல்வி? பார்த்தால் வெகு சாதுவாகத் தோன்றுகிறது. ஆனால், பல்லவ சைன்யத்தின் தலைசிறந்த

தளபதி, வாதாபியின் யானைப் படையைச் சிதற அடித்த தீரர், கங்க நாட்டானையும் பாண்டிய ராஜனையும் புறமுதுகிடச் செய்த மகா வீரர், அப்படிப்பட்ட என் சிநேகிதரை உங்கள் புதல்வி ரொம்பவும் பயப்படுத்தி யிருக்கிறான். இனிமேலாவது அப்படி யெல்லாம் செய்ய வேண்டாமென்று சொல்லுங்கள். பரஞ்சோதியை இங்கே அழைத்து வருவதற்கு நான் என்ன பாடுபட வேண்டி யிருந்தது தெரியுமா? கையைப் பிடித்துப் பலாத்காரமாய் அழைத்து வரவேண்டி யிருந்தது. அம்மா! நீங்களே கேளுங்கள்: உங்கள் புதல்வர் இங்கே வரமாட்டேன் என்று பிடிவாதம் பிடித்தாரா, இல்லையா, என்று! கேளுங்கள், தாயே!" என்று மாமல்லர் கூறியபோது, பரஞ்சோதியின் தாயார் மகனை அன்பும் கர்வமும் ததும்பிய கண்களால் பார்த்து, "குழந்தாய்! மாமல்லப் பிரபு சொல்வது உண்மையா? என்னை யெல்லாம் வந்து பார்க்க உனக்குப் பிடிக்க வில்லையா?" என்றாள்.

"ஆம், அம்மா! பல்லவ குமாரர் உண்மையைத் தவிர வேறு எதுவும் சொல்லுவதில்லை. ஆனால், அவரையே கேளுங்கள், ஏன் எனக்கு இங்கு வந்து உங்களை யெல்லாம் பார்க்கப் பிடிக்க வில்லை யென்று?" என்றார் பரஞ்சோதி.

தாயார் கேட்க வேண்டுமென்று வைத்துக் கொள்ளாமல் மாமல்லரே சொன்னார்—"அன்னையே! உங்கள் அருமை மகன் காஞ்சிக்குப் போய்க் கல்வி கற்றுப் புலவராகத் திரும்பி வருகிறேன் என்று உங்களிடம் வாக்குறுதி கூறிவிட்டுப் புறப்பட்டானும். அந்த வாக்கை நிறைவேற்ற முடிய வில்லையாம். போனபோது எப்படிப் போனாறோ அப்படியே நிரட்சரகுட்சியாகத் திரும்பி வந்திருக்கிறான். அதனால் உங்களை யெல்லாம் நிமிர்ந்து பார்க்கவே வெட்கமா யிருக்கிறதாம். எப்படி யிருக்கிறது கதை?"

இவ்விதம் மாமல்லர் சொன்னதும் பரஞ்சோதியின் தாயார் உடனே மகனுக்கு அருகில் வந்து உட்கார்ந்து அவனுடைய முதுகையும் தலையையும் தடவிக் கொடுத்துக் கொண்டே, "அப்பா! குழந்தாய்! நீ படித்தால் என்ன, படிக்கா விட்டால் என்ன? காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சு. ஏதோ சிவபெருமான் அருளால் நீ உயிரோடு நல்லபடியாய்த் திரும்பி வந்தாயே, அதுவே எனக்குப் போதும். அந்த நாளில் உனக்குப் படிப்புச் சொல்லிக் கொடுக்க வந்த அண்ணுவிமார்களை நீ அடித்து விரட்டினாயே, அதற்காக வெல்லாம் நான் உன்னை எப்போதாவது கோபித்ததுண்டா?" என்று கூறியதும், மாமல்லர் இடியிடி யென்று சிரிக்கலானார். சிரித்துக் கொண்டே அவர் சொன்னதாவது:—

"என்ன? என்ன? உபாத்தியாயர்களை அடித்து விரட்டினானா உங்கள் மகன்? நல்ல வேளையாய்ப் போச்சு! பிழைத்தேன், அம்மா! இந்த சாதுப் பிள்ளைதான் என்னைத் தனக்குப் படிக்கக் கற்றுக் கொடுக்கும்படி தொந்தரவு செய்தான். அவன் சொல்வது உண்மை என்று எண்ணிக்கொண்டு நான் பாடம் ஆரம்பித்திருந்தேனானால் என்னையும் அப்படித்தானே அடித்துத் துரத்தி யிருப்பான்? பிழைத்தேன்!" என்று சொல்லி, மீண்டும் சிரித்தார் நரசிம்ம வர்மர்.

பரஞ்சோதி அவரைப் பரிதாப நோக்குடன் பார்த்து, "பிரபு! இது ஏதோ பரிகாசம் செய்து சிரிப்பதற்குரிய விஷயமாக நினைக்கிறீர்கள். உண்மையில் அப்படியல்ல. காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சு. ஆகையால்தான் என் தாயார் நான் கல்வி கல்லாமல் திரும்பி வந்திருப்பதைப் பொறுக்கிறாள். ஆனால் என் மாமாவைக் கேளுங்கள். படிப்பில்லாத இந்த நிர்மூடனுக்கு அவர் தமது மகளைக் கட்டிக் கொடுப்பாரா என்று கேளுங்கள்!......" என்றதும், நமசிவாய வைத்தியரும் அந்தப் பரிகாசப் பேச்சில் கலந்துகொள்ள எண்ணி, "என்னைக் கேட்பானேன்? கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிற பெண்ணையே கேளுங்கள்! அவளுக்குச் சம்மதமா யிருந்தால் எனக்கும் சம்மதந்தான்!" என்றார்.

உடனே பரஞ்சோதி சிறிது கோபமான குரலில், "பார்த்தீர்களல்லவா,

தட்டிக் கழிப்பதை! தகப்பனுரைக் கேட்டால் பெண்ணைக் கேட்கவேண்டுமென்பார். பெண்ணைக் கேட்டால் தகப்பனுரைக் கேட்க வேண்டுமென்பாள். இதற்காகத்தான், பிரபு, நான் இங்கு வருவதற்கு இஷ்டப்படவில்லை. வீணில் என்னை அவமானப்படுத்துவதற்காகவே இங்கே அழைத்து வந்தீர்கள் ......'' என்ருர்.

இப்படிப் பரஞ்சோதி சொல்லிக் கொண்டிருந்தபோது ஏதோ கதவு திறந்த சத்தம் கேட்கவே எல்லாரும் அந்தப் பக்கம் நோக்கினர்கள். உமையாள் கதவைத் திறந்து கொண்டு உள் அறைக்குள் போய்க் கொண்டிருந்தாள்.

"எல்லாரும் சேர்ந்து பரிகாசம் செய்தால், குழந்தை என்ன செய்வாள்? வெட்கப்பட்டுக் கொண்டு உள்ளே போகிருள்!'' என்று உமையாளின் தாயார் முணுமுணுத்தாள்.

பிறகு நமசிவாய வைத்தியர், சக்கரவர்த்தி குமாரரைப் பார்த்து, "தம்பி பரஞ்சோதியின் பராக்கிரமச் செயல்களைக் குறித்து அடிக்கடி கேள்விப்பட்டுக் கொண்டுதானிருக்கிறோம். அவனால் இந்த ஊருக்கே பெருமை. இந்தச் சோழநாட்டுக்கே பெருமை. மறுபடியும் இந்தப் பக்கம் எப்போது வருவானோ என்னமோ என்று எல்லாரும் ஏக்கப்பட்டுக் கொண்டிருந்தோம். ஏதோ எங்கள் அதிர்ஷ்டம் இவ்வளவு சீக்கிரத்தில் அவன் இங்கு வரலாயிற்று. அவனோடு பூமண்டலாதிபதியாகிய தாங்களும் விஜயம் செய்திருக்கிறீர்கள். இதெல்லாம் எங்கள் பூர்வ ஜன்ம தவத்தின் பலன் என்றுதான் சொல்லவேண்டும். புவிக்கரசராகிய தாங்கள் வந்திருக்கும் சமயத்தில் நாவுக்கரசர் பெருமானும் இவ்வூருக்கு வந்திருக்கிருர். இப்பேர்ப்பட்ட நல்ல சந்தர்ப்பம் மறுபடி எங்கே கிடைக்கப் போகிறது? இப்போதே ஒருநாள் பார்த்துச் சுபமுகூர்த்தத்தில் தம்பிக்கு விவாகத்தை நடத்தி விடுவோம். உமையாளையும் உங்களுடனேயே அழைத்துப் போய்விடுங்கள்!'' என்று நமசிவாய வைத்தியர் கூறி நிறுத்தினர்.

அந்தச் சமயம் பார்த்து மாமல்லர், "பார்த்தீரல்லவா தளபதி! எப்படியும் உமக்குக் கல்வி கற்பித்துப் புலவராக்கி விடுவது என்று உமது மாமன் தீர்மானித்திருக்கிருர் என்று தெரிகிறது. வேறு எந்த உபாயமும் பயன்படாமற் போகவே, அவருடைய மகளைக்கொண்டே உமக்குக் கல்வி போதிக்கத் தீர்மானித்திருக்கிருர். ஆகா! கடைசியாக, நீர் அடித்துத் துரத்த முடியாத உபாத்தியாயர் ஒருவர் உமக்கு ஏற்படப் போகிருரல்லவா?'' என்றதும், அதுவரை மட்டு மரியாதையுடன் அடக்கமாயிருந்த ஸ்திரீகள் உள்பட எல்லாரும் 'கொல்' லென்று சிரித்தார்கள்.

பிறகு, சக்கரவர்த்தி குமாரர் நமசிவாய வைத்தியரைப் பார்த்து, "ஐயா! அதெல்லாம் முடியாது. பல்லவ ராஜ்யத்தின் வீர தளபதிக்குத் தலை நகரத்திலே சக்கரவர்த்தியின் முன்னிலையிலேதான் கலியாணம் நடைபெற வேண்டும். இது என் தந்தையின் ஆக்ஞை. காஞ்சிக்கு நாங்கள் போன உடனே ஆள் விடுகிறோம். எல்லோரும் வந்து சேருங்கள். இன்னும் ஒரு விஷயமும் சொல்லி வைக்கிறேன். அப்படி ஒருவேளை உங்களுடைய குமாரி கல்வி கேள்விகளில் வல்ல புலவரைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன் என்று பிடிவாதம் பிடித்தால் அதற்கும் வழி இருக்கிறது. காஞ்சியில் எங்கள் குலகுரு ருத்ராச்சாரியார் என்பவர் இருக்கிருர். வயது தொண்ணூறுதான் ஆகிறது. அவருடைய தாடி ஒரு முழ நீளத்துக்குக் குறையாது. அவர் அறியாத கலையோ அவர் படியாத ஏடோ, ஒன்றும் கிடையாது. அவரை வேணுமானாலும் உங்கள் புலமை மிகுந்த பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ளச் செய்கிறேன்!'' என்று பலத்த சிரிப்புக்கிடையே கூறிவிட்டு, "தளபதி! வாரும், போகலாம்! திருநாவுக்கரசரைத் தரிசித்து விட்டு வரலாம்!'' என்று சொல்லிக் கொண்டே எழுந்தார்.

மாமல்லரும் பரஞ்சோதியும் புறப்பட்டுப் போனபிறகு, அந்த வீட்டார் குமார சக்கரவர்த்தியின் சாதுர்ய

மான பரிகாசப் பேச்சுகளைப் பற்றியும், அவருக்கும் பரஞ்சோதிக்கும் இடையே ஏற்பட்டிருந்த அதிசயமான சிநேகத்தைப் பற்றியும், அவர்கள் இருவருடைய கம்பீரமான தோற்றத்தைப் பற்றியும் வியந்து வியந்து பேசிக் கொண்டிருந்தார்கள். இதற்கிடையில் எங்கிருந்தோ விம்மல் சத்தம் கேட்டது. அந்தச் சத்தம் கேட்ட இடத்தை நோக்கிச் சென்று பார்த்தபோது, உள்ளறையில் உமையாள் தரையில் குப்புறப் படுத்து விசித்து அழுது கொண்டிருப்பதைக் கண்டார்கள்.

* * *

மாமல்லரும் பரஞ்சோதியும் நாவுக்கரசர் பெருமானை அவர் தங்கியிருந்த திருமடத்தில் பார்த்துவிட்டுத் திரும்பி வந்தவுடன், பரஞ்சோதியின் தாயார் அவனுடைய கையைப் பிடித்துக்கொண்டு, "இங்கே வா, தம்பி! ஒரு சமாசாரம்!" என்று உள் அறைக்கு அவனை அழைத்துக் கொண்டு போனாள்.

அங்கே இன்னமும் தரையில் படுத்துத் தேம்பிக் கொண்டிருந்த உமையாளைக் காட்டி, "பார்த்தாயா, உன்னுடைய பரிகாசப் பேச்சு இந்தப் பெண்ணை என்ன பாடு படுத்தியிருக்கிறதென்று! இப்படிச் செய்யலாமா, அப்பா!" என்றாள்.

பரஞ்சோதி உண்மையிலேயே மனம் இளகியவராய், "ஐயோ! இது என்ன பழி? நான் ஒன்றும் பரிகாசம் செய்யவில்லையே?" என்றார்.

"செய்ததையும் செய்து விட்டு இல்லை என்று சாதிக்காதே! இந்தக் குழந்தை என்ன சொல்கிறாள் தெரியுமா? நீ காஞ்சிப் பட்டணத்துக்குப் போய் அரண்மனை உத்தியோகமும் சக்கரவர்த்தியின் சிநேகிதமும் சம்பாதித்துக் கொண்டாயாம். இந்தப் பட்டிக்காட்டுப் பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ள உனக்கு இஷ்டம் இல்லையாம். அதனாலேதான் இப்படியெல்லாம் பேசுகிறாயாம்!"

"ஐயோ! அப்படி இல்லவே இல்லை, அம்மா!"

"அப்படியானால் நீயே இந்தப் பெண்ணுக்குச் சமாதானம் சொல்லித் தேற்று. நான் எவ்வளவோ சொல்லியும் இவள் கேட்கவில்லை!" என்று கூறிவிட்டு, பரஞ்சோதியின் தாயார் வெளியேறினாள்.

அன்னையின் கட்டளையைச் சிரமேற்கொண்டு பரஞ்சோதி உமையாளைத் தேற்றத் தொடங்கினார். ஆனால் உமையாள் அவ்வளவு சீக்கிரம் தேறுகிறதாகத் தோன்றவில்லை. வெகு நேரம் பரஞ்சோதி தன்னைத் தேற்ற வேண்டும் என்று அவள் ஆசைப்பட்டதாகத் தோன்றியது. தேறுவது போல் ஒரு கணம் இருப்பாள்; மறு கணத்தில் மறுபடியும் விம்மவும் விசிக்கவும் தொடங்கிவிடுவாள்.

உமையாள் பட்டணத்து நாகரிகம் அறியாத பட்டிக்காட்டுப் பெண்தான். ஆனபோதிலும் தன்னுடைய மனோரதத்தை நிறைவேற்றிக் கொள்வதற்கு நல்ல உபாயம் எதுவென்பது அவளுக்குத் தெரிந்திருந்தது. பரஞ்சோதி சீக்கிரம் வெளியில் போவதற்கு முடியாத வண்ணம் வெகு நேரம் தன்னைத் தேற்றிக்கொண்டே இருக்க வேண்டிய அவசியத்தை அவள் உண்டு பண்ணிக் கொண்டிருந்தாள்.

எவ்வளவு நீளமான நாடகத்துக்கும் ஒரு முடிவு உண்டு அல்லவா? அவ்விதம் இந்த நாடகத்துக்கும் முடிவான மங்களம் பாடவேண்டிய சமயம் வந்தபோது, உமையாள் பரஞ்சோதியிடம் கையடித்துச் சத்தியம் வாங்கிக் கொண்டாள்; தன்னையே அவர் மணந்து கொள்ள வேண்டும் என்பதாக.

அவ்வாறு சத்தியம் செய்து கொடுத்த பின், பரஞ்சோதி கூறினார்:—"ஆனால், உமா! ஒன்று சொல்கிறேன்: நம் கல்யாணம் உன் தந்தை சொன்னதுபோல் அவ்வளவு சீக்கிரமாக நடைபெறாது. வெகு காலம் நீ காத்திருக்க வேண்டியிருக்கலாம். என் சிநேகிதர் மாமல்லருக்கு எப்போது திருமணம் நடக்கிறதோ, அப்போதுதான் நமது கலியாணமும் நடைபெற வேண்டும். அவருக்கு முன்னால் நான் இல்லறத்தை மேற்கொள்ள மாட்டேன்!"

"அத்தான்! உங்களுக்காக யுக யுகமாகக் காத்திருக்க வேண்டுமானாலும் காத்திருக்கிறேன்!" என்றாள் உமா.



# வெறுப்பை உற்சாகமாக மாற்றுக!

யுத்த சமயம் வாழ்க்கை மிகவும் கஷ்டமுள்ளதாக இருக்கிறது. உணவுப்பொருள்கள் கிராக்கியாக இருக்கின்றன. வேலைக்காரர்களை வைத்திருப்பது கஷ்டம். எரி இரும்பு, துணிமணி அதிக செலவுள்ளதாயும் கிடைப்பது கஷ்டமாயும் இருக்கின்றன. ஓய்வென்பதோ-அது எங்கு கிடைக்கிறது?

இருந்தபோதிலும் நீங்கள் டீ அருந்தலாம். இன்னமும் டீ நிறையவும் மலிவாகவும் கிடைக்கிறது. புதிதாக தயாரித்த நல்ல ஒரு கோப்பை டீ மன அமைதியை கொடுத்து தளர்ந்த நரம்புகளுக்கும் பலம் உண்டாக்குகிறது. அது சேர்த்து விறதே தவிர கெடுதல் செய்வதில்லை. அது ஒருபொழுதும் நமக்கு கெடுதல் அளிக்காத நமது சொந்த இந்திய விளைவு.



இந்தியன் டீ

சமயம் டீ அருந்துங்கள்

இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரால் வெளியிடப்பட்டது.

# இரண்டாம் நாள்



சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

முதல் நாளில் பாண்டவ சேனை பயத்தால் பிடிக்கப்பட்டதைக் கண்டு, சேனாதிபதியான திருஷ்டத்யும்னன் கவலைப் பட்டு அடுத்த தினம் தன் சேனையை மிகக் கவனத்தோடு வியூகப் படுத்தித் தைரியமும் உற்சாகமும் ஊட்டினான்.

துரியோதனனோ கர்வமடைந்து கரையற்ற கடல் போல் பரவியிருந்த தன் சேனையின் நடுவில் நின்று கொண்டு யுத்த வீரர்களைப் பார்த்து "கவசம் பூண்ட வீரர்களே, நம்முடைய வெற்றி நிச்சயம். உயிரைப் பொருட் படுத்தாமல் போர் புரியுங்கள்" என்று கர்ஜனை செய்தான்.

பீஷ்மரின் தலைமையில் கௌரவப் படை பாண்டவ சேனையைப் பலமாகத் தாக்கிற்று. வியூகம் உடைந்து போய்ப் பாண்டவ சேனையில் மறுபடியும் பெரும் நாசம் ஏற்பட்டது.

அருச்சுனன் தன் சாரதியாயிருந்த கிருஷ்ணனைப் பார்த்து "நாம் இப்படியே அஜாக்கிரதையாக இருந்தோமானால் பீஷ்மர் நம்முடைய சேனை முழுமையையும் சீக்கிரமே நாசம் செய்து விடுவார். பீஷ்மரை வதம் செய்தாலொழிய நம்முடைய சைன்யம் தப்பாது" என்றான்.

கிருஷ்ணன் "தனஞ்சய! இதோ பிதாமகருடைய ரதத்தை அடைவாய். தேரைச் செலுத்துகிறேன். அவரைத் தாக்க ஆயத்தம் செய்து கொள்" என்று சொல்லி அருச்சுனனுடைய தேரைப் பீஷ்மர் இருந்த இடத்தை நோக்கிச் செலுத்தினான்.

வேகத்தோடு தன்னை நோக்கி வரும் அருச்சுனனைக் கண்டு பிதாமகரும் அவனைப் பாணங்களால் வரவேற்றார். வீரர்களுக்குள் முதன்மையானவர் என்று உலகம் ஓங்கும் புகழைப் பெற்றிருந்த பீஷ்மர் நன்றாகக் குறி பார்த்துப் பார்த்தன் மேல் பாணங்களை விட்டார். பிதாமகரை எந்தக் காலத்திலும் ஜாக்கிரதையாகப் பாதுகாக்கும்படி சேனைக்குத் துரியோதனன் கட்டளை இட்டிருந்தான். பீஷ்மரைச் சுற்றியிருந்த வீரர்கள் அனைவரும் அருச்சுனனைத் தாக்கினார்கள். தனஞ்சயன் அதையெல்லாம் கொஞ்சமும் லட்சியம் செய்யவில்லை. தனஞ்சயனை எதிர்த்துப் போர் செய்யக் கூடியவர்கள் கௌரவ சேனையில் பிதாமகரான பீஷ்மர், துரோணர், கர்ணன் ஆகிய மூன்று பேர்களே: வேறு யாராலும் முடியாது என்பது பிரசித்தி. தன்னைத் தடுத்த வீரர்களின் கூட்டத்தில் அருச்சுனன் பிரவேசித்து மகாரதர்கள் அனைவரையும் பிரமிக்கச் செய்யும்படியான லாகவத்தோடு காண்டீபத்தை உபயோகித்தான். பகைவர்களின் தேர்களினிடையில் அவனுடைய தேர் அற்புத முறையில் இங்கு மங்கும் கண்ணுக்குத் தெரியாமல் சஞ்சாரம் செய்தது. துரியோதனனுடைய இதயம் அப்போது கலங்கிற்று. பீஷ்மரிடம் வைத்திருந்த நம்பிக்கை குறைய ஆரம்பித்தது.

"கங்கா புத்திரரே! நீரும் துரோணரும் உயிரோடிருக்கும்போதே இந்த அருச்சுனனும் கிருஷ்ணனும் நம்முடைய சேனை முழுவதையும் நாசம் செய்துவிடுவார்கள் போலிருக்கிறது. என்மேல் உண்மையான அன்பை வைத்திருக்கும் கர்ணன் உமக்காக ஆயுதம் எடுக்காமல் இருக்கிறான். நான் ஏமாற்றம் அடைவேன் போலிருக்கிறது. பல்குனனைக்


இந்தியத் தேயிலையில் மிகச் சிறந்தது




LIPTON'S
TEA GIRL
FINEST DUST TEA

சொல்லும்படியான வழியை நீர் உடனே தேடவேண்டும்" என்றான்.

பீஷ்மார்ஜுன யுத்தத்தைப் பார்க்க தேவர்களும் கந்தர்வர்களும் வந்துவிட்டார்கள். இருவர் ரதங்களிலும் வெள்ளைக் குதிரைகள் பூட்டியிருந்தன. இருவரும் சம வீரர்களாகவும் போர்த் திறமை காட்டுவதில் மகிழ்ச்சி கொண்டவர்களாகவும் வெகு நேரம் யுத்தம் செய்தார்கள். இரு பட்சத்திலும் பாணங்கள் எண்ணற்ற கணக்கில் விடப்பட்டன. அம்புகள் அம்புகளை வெட்டித் தடுத்தன. பீஷ்மருடைய பாணங்கள் கிருஷ்ணன் மார்பிலும் பாய்ந்தன. காயங்களிலிருந்து ரத்தம் ஒழுகிப் பச்சை வண்ண மாதவன் மலர் பூத்த பலாச மரம் போல் முன்னை விட அழகாக ஜொலித்தான். மாதவன் காயம் பட்டதைக் கண்டு பார்த்தனுக்கு ஆத்திரம் பொங்கிப் பிதாமகரைப் பலமாகத் தாக்கினான்.

ஆயினும் இருவரில் யாரும் ஜயிக்க முடியாமல் அருச்சுனனும் பீஷ்மரும் வெகு நேரம் அற்புதப் போரை நடத்தினார்கள். இரு ரதங்களும் ஒன்றை ஒன்று தாக்கி இங்குமங்கும் செல்லும் போது இரு தரப்புச் சேனைகளுக்கும் கொடிகளின் அடையாளம் ஒன்றே வித்தியாசம் தெரிந்தது. மற்றப்படி பிதாமகரும் தனஞ்சயனும் யுத்தம் செய்து குருக்ஷேத்திரத்திலிருந்த வீரர்களையும் வானத்திலிருந்த தேவர்களையும் வியக்கச் செய்து கொண்டிருக்கையில் மற்றொருபுறம் யுத்தகளத்தில் துரோணரோடு அவருக்குப் பிறவிப் பகையும் பாஞ்சால ராஜன் மகனும் திரௌபதியின் சகோதரனுமான திருஷ்டத்யும்னன் பெரும்போர் நடத்திக்கொண்டிருந்தான். துரோணர் திருஷ்டத்யும்னனைப் பலமாகத் தாக்கிக் காயங்கள் உண்டாக்கினார். ஆனால் திருஷ்டத்யும்னன் கலங்காமல் துவேஷச் சிரிப்புச் சிரித்துக் கொண்டு பாணங்களைப் பொழிந்தான். துரோணரும் அவன் எய்த பாணங்களையும் வீசிய கத்தியையும் கதாயுதத்தையும் வெகு சாமர்த்தியமாகத் தம் அம்புகளால் வெட்டித் துண்டாக்கினார். திருஷ்டத்யும்னனுடைய வில்லைப் பல தடவை துரோணர் அறுத்து வீழ்த்தினார். திருஷ்டத்யும்னனுடைய சாரதியும் வீழ்த்தப்பட்டான். அதன் மேல் கோபங் கொண்டு கதாயுதம் ஒன்று எடுத்துத் தேரினின்று கீழே குதித்துத் துரோணர் மேல் பாய வந்தான். துரோணர் கதாயுதத்தையும் பாணங்களால் கீழே விழச் செய்தார். பாஞ்சாலன் ஆத்திரம் தாங்காமல் கத்தியை வீசிக்கொண்டு யானைமேல் சிங்கம் பாய்வது போல் துரோணரை நோக்கிச் சென்றான். துரோணர் சரங்களைப் பொழிந்து அவனைத் தடுத்து நடக்கவும் முடியாத நிலைமையை அவன் எய்தும்படி செய்தார். அந்தச் சமயத்தில் பீமசேனன் திருஷ்டத்யும்னனுடைய நிலைமையைத் தெரிந்து விரைவாக வந்து துரோணர் பேரில் பல பாணங்களை விட்டான். அவ்வாறு அவகாசம் செய்து கொண்டு பாஞ்சாலனைத் தன் தேரின் மேல் ஏற்றிக் கொண்டு சென்றான்.

இதைப் பார்த்த துரியோதனன் பீமனைத் தாக்கும்படி கலிங்கர் சேனைக்குக் கட்டளையிட்டான்.

பீமசேனன் தன்னை எதிர்த்த கலிங்கர் படையைச் சின்னாபின்னம் செய்து வெட்டி நாசமாக்கினான். காலனே பீமனைப்போல் உருவம் எடுத்து வந்து கலிங்கரை வதம் செய்கிறான் என்று சேனை முழுவதும் அலறிற்று. கௌரவச் சேனை உற்சாகம் அழிந்து பயப்படுவதைப் பார்த்த பீஷ்மர் கலிங்கருடைய உதவிக்கு அந்த இடம் வந்து சேர்ந்தார். பீஷ்மர் பீமனைத் தாக்கச் சென்றதை யறிந்து சாத்யகியும் அபிமன்யுவும் மற்றவர்களும் பீஷ்மரைத் தாக்கினார்கள். சாத்யகி விடுத்த ஒரு அம்பு பிதாமகருடைய சாரதியை வீழ்த்திற்று. சாரதி வீழ்ந்ததும் குதிரைகள் பிய்த்துக் கொண்டு எதிர்பாராத வேகத்துடன் யுத்தகளத்தை விட்டு ஓடின. இதைப் பார்த்துப் பாண்டவ சைன்யம் குதூகலம் அடைந்தது. கூட்டோடு கூடாகக் கௌரவ சேனையைப் பலமாகத் தாக்கிற்று. அருச்சுனன் அன்று காட்டிய பராக்கிரமத்தினால் கௌரவச் சேனை மிகவும் சேதமடைந்து. உற்சாகம் இழந்து சூரியன் எப்போது மறைவான் என்று எதிர்நோக்கிக் கொண்டிருந்தது.

சூரியன் அஸ்தமனகிரி அடைந்ததும் பீஷ்மர் துரோணரைப் பார்த்து "யுத்தத்தை இப்போது நிறுத்துவதே உசிதம். நம்முடைய சேனையானது களைப்பும் பயமும் அடைந்திருக்கிறது" என்றார். பாண்டவர் பக்கத்தில் தனஞ்சயன் முதலானோர் நான்கு வித வாத்திய கோஷங்களுடன் வெகு சந்தோஷமாகத் தங்கள் பாசறைகளுக்குத் திரும்பினார்கள். முதல் நாள் யுத்தத்தில் பாண்டவர்கள் பயந்ததுபோல் இரண்டாவது நாள் முடிவில் கௌரவர்கள் மனக் கலக்கத்தை அடைந்தார்கள்.





# அழகுக்கு அழகு செய்வார் உண்டோ!

உண்மை எழில் பொன்னணிகளிலும் பட்டாடைகளிலுமன்று - இவைகள் அவ்வளவு விலை யுயர்ந்தவைகளானாலும், இயற்கையாக இல்லாத வசீகரத்தை உண்டு பண்ண முடியா. மாசற்ற காந்தியுடன் விளங்கும் வதனமொன்றே மெல்லியரின் அற்புத வனப்பிற்கு இன்றியமையாத தாகும்.

மென்மலரிதழ் போன்ற வதன சௌந்தரியம் பெற பாண்ட்ஸ் க்ரீம்கள் நிச்சயமாக உதவு மென்பது அனுபவத்திற் கண்டறிந்த விஷயம். உபயோகித்துப் பாருங்கள். சொற்ப வாரங்களுள் உங்கள் வதனம் என்று மில்லா மிருதுத்துவமும் புதுமை காந்தியும் வாய்த்து விளங்கும்.

**பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம்:** காலையிலும் மாலையிலும் முகத்தில் மெதுவாகத் தடவி, சொற்ப நிமிஷங்கள் அப்படியே வைத்திருந்து, பின்பு அழுத்தித் துடையுங்கள். அது மயிர்க்கண்களினூடே சென்று அங்குள்ள எண்ணெய் அழுக்குகளைக் கரைத்துப் போக்கி விடுவதோடு, சருமத்திற்கு அவசியமான வளப்பத்தையும் அளிக்கிறது.

**பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்:** எண்ணெய்ப் பொருள்கள் இல்லாததாகையால் பகல் நேரத்தில் தாராளமாக உபயோகிக்கலாம். அது சருமத்திற்கு மென்மையைக் கொடுத்து வெயில் காற்று முதலியவற்றிலிருந்து பாதுகாக்கிறது.

## பாண்ட்ஸ்




## க்ரீம்

P. 2829 I



# மீனாட்சி



மாஜினி

நு. மு. வி. முருகப்பச் செட்டியார் சென்னையில் வெகு பிரசித்தம். அதிலும் ஏழை எளியவர்களுக்கு அவர் பெயர் சர்வ சாதாரணம். ஏதாவது நகை நட்டுகளை வைத்துக் கடன் வாங்க வேண்டியிருந்தால், அவருடைய கடைக்குத்தான் ஓடிவருவார்கள். நகரில் உள்ள மற்ற லேவாதேவிக் கடைகளைவிட இங்கு வட்டி ஒன்றும் குறைவு கிடையாது. சொல்லப்போனால் சில சமயங்களில் மற்றெல்லாக் கடைகளையும்விட இங்கு இரட்டிப்பு வட்டிகூடக் கறந்து விடுவார்கள். அப்படியிருந்தும் அவர் கடையில் எந்த நேரமும் கூட்டம் சொல்லி முடியாது.

இவ்வளவுக்கும் காரணம் ஸ்ரீமான் நடேச முதலியார், செட்டியார் கடையில் காரியஸ்தராக இருந்ததுதான். முதலியார் பேசினாரென்றால் கல்லும் கரைந்துவிடும்; இரும்பும் உருகிவிடும்! அவ்வளவு கனிவாகப் பேசுவார்.

செட்டியாரிடம் முதலியார் வேலைக்கு வந்து அமர்ந்தது இன்று நேற்றல்ல. முழுசாக இருபத்தெட்டு வருஷங்கள் ஆகி விட்டன. இப்போது அவருக்கு நாற்பது வயதாகிறது. பன்னிரண்டு வயதில் அனாதையாய்த் தெருத்தெருவாய்த் திரிந்து, கடையில் செட்டியாரிடம் 'எடுபிடி' வேலைக்கு அமரும்போது அவரிடம் கொண்டிருந்த பயபக்தியும், விசுவாசமும் இன்றுவரையில் துளிக்கூட மாறவில்லை!

முதலியார் பெண் எடுத்த இடம் திருவெண்ணெய் நல்லூர். பத்மாசனிக்குப் பெற்றோர்கள் கிடையாது. நெருங்கிய பந்துக்களும் இல்லை. தூரபந்து ஒருவரிடம்தான் பத்மாசனியும் அவளது ஒரே தங்கை மீனாட்சியும் வளர்ந்து வந்தனர். பத்மாசனியின் சுந்தர முகத்தையும், அடக்க குணத்தையும் கண்டு முதலியாரே எல்லாச் செலவையும் போட்டுக் கல்யாணத்தை முடித்து விட்டார். பத்மாசனியைத் தவிர மீனாட்சிக்கு வேறு கதி இல்லையாதலால், அவளை வளர்த்துக் கரையேற்றும் பொறுப்பும் முதலியார் தலையில் விழுந்தது. அப்போது அவளுக்கு வயது ஆறு.

முதலியார் இல் வாழ்க்கையை மேற்கொண்டு பத்து வருஷங்கள் ஒரு விநாடி போல் மறைந்து விட்டன. இதற்குள் எத்தனையோ மாறுதல்கள். மீனா வளர்ந்து யுவதியாகி விட்டாள். சிறு வயதிலேயே அவளுக்கு ஆளை விழுங்கும் விழிகள் உண்டு. அதிலும் இப்போது யௌவனத்தின் கடாட்சம் பரிபூரணமாக அவள் மீதிருக்கும் போது சொல்லவா வேண்டும்? பேசும் தங்க விக்கிரகமாகி விட்டாள்.

குழந்தை இல்லாமல் 'புத்' என்ற நரகத்திற்குப் போய் விடுவோமோ என்ற பயமும் முதலியாருக்கு நீங்கி விட்டது. இந்தப் பயத்தைப் போக்கிய அவரது குமாரனுடைய பெயர் கண்ணுசாமி.

குழந்தை கண்ணுவுக்கு இன்னும் ஐந்து வயது கூடச் சரியாக நிரம்பவில்லை. அதற்குள் அவன் செய்யும் 'சுட்டி'த் தனம் சகிக்க முடியாது. இத்தனையும் முதலியாரிடமும் பத்மாசனியிடமும்தான். மீனுவிடம் சாந்த சொரூபியாக நடந்து கொள்வான். காரணம், அவளிடமுள்ள பயமல்ல— அவனுடைய இளம் உள்ளத்தில் மீனுவின் மீது ஊற்றெடுத்த அன்பு வெள்ளம்தான். அவளுக்கும் குழந்தைமீது அளவு கடந்த வாத்சல்யம்.

மீனுவுக்குக் கண்ணுசாமியை விட்டு ஒரு விநாடி பிரிந்திருப்பதென்றாலும் ஒரு யுகம் போலிருக்கும். அவனுக்கும் அப்படித்தான். அவள் சாதம் ஊட்டினால்தான் சாப்பிடுவான்; அவள் பாட்டுப் பாடினால்தான் தூங்குவான். சுருக்கச் சொன்னால் மீனுதான் அவனுடைய அம்மா.

## 2

ஒரு கார்த்திகை தினம். கூடவே ஒருவருக்குச் சேர்த்துச் சமையல் செய்யும்படி முதலியார், கடையிலிருந்து ஆள் மூலம் சொல்லி அனுப்பியிருந்தார். பத்மாசனியும் ரொம்பத் 'தடபுட'லாகச் சமையல் செய்து வைத்து விட்டு முதலியாரின் வருகையை எதிர் பார்த்துக் கொண்டிருந்தாள்.

முதலியார் வருகிறாரா என்று பார்க்கத் 'திடுதிடு' வென்று வெளி வாசலுக்கு ஓடின மீனு தாழ்வாரத்தின் பாதி வரையில்கூட வந்திருக்க மாட்டாள். அப்போது முதலியாரும் இன்னொரு இளைஞனும் வீட்டுக்குள் பத்தடி தூரம் வந்து விட்டனர். மீனு நடு நடுங்கிப் போய், செய்வது இன்னது என்று அறியாது ஒரு விநாடி பதுமை போல் நின்று விட்டாள். பிறகு எப்படியோ சமாளித்துக் கொண்டு மிரண்ட பார்வையுடன் அந்த இளைஞனை ஒரு முறை ஏறிட்டுப் பார்த்து விட்டுத் தாழ்வாரத்துக்கு அடுத்தாற் போலுள்ள அறைக்குள் ஓடி மறைந்து விட்டாள். முதலியாரோடு வந்திருந்த இளைஞனுக்கு இந்தக் காட்சி ஏதோ மின்னல் வெட்டு வதுபோ லிருந்தது.



சாப்பாடு ஆனதும் முதலியாரும் அவரது நண்பரும் தாழ்வாரத்தில் போட்டிருந்த ஊஞ்சலில் உட்கார்ந்து சவிஸ்தாரமாகப் பேசிக் கொண்டிருந்தனர். உள்ளே ரேழியில் மீனாட்சி பாத்திரங்களைத் தேய்த்துக் கொண்டிருந்தாள். சிறிது நேரத்தில் இளைஞன் முதலியாரிடம் விடைபெற்றுக் கொண்டு போய்விட்டான்.

இதுவரையில் அடுப்படியில் அடைக்கலம் புகுந்திருந்த பத்மாசனியை முதலியார் கூப்பிட்டு "இப்போது வந்துவிட்டுப் போனாரே, அவர்தான் புதிதாகத் திறந்திருக்கும் எங்கள் பிராஞ்சுக் கடைக்குக் காரியஸ்தர். நம்ம ஜாதிதான். பெயர் சுவாமிநாதன். நல்ல யோக்கியமானவர். அவருக்குத்தான் நம் மீனுவைக் கொடுக்கலாம் என்று உத்தேசித்திருக்கிறேன்" என்று சற்று உரத்தே கூறினார்.

இந்தச் சமயத்தில் பாத்திரங்கள் விளக்கும் ஓசை திடீரென்று நின்றதைப் பார்த்ததும் முதலியாரும் அவரது தர்ம பத்தினியும் ஒருவரை ஒருவர் பார்த்துச் சிரித்துக் கொண்டனர்.

மேற்கூறிய சம்பவத்திற்குப் பிறகு சுவாமிநாதன் முதலியார் வீட்டுக்கு அடிக்கடி வர ஆரம்பித்தான். அவர் குடும்பத்துடன் தொடர்பும் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே வந்தது. இதற்குக் காரணம் மீனுதான் என்று சொல்ல வேண்டியதில்லை. அன்றொரு தினம் மீனுவைச் சந்தித்ததிலிருந்து அவன் மனம் அலை வீசிக் கொண்டிருந்தது. மணப் பந்தலில் அவளது மெல்லிய கரத்தைப் பற்றினாலொழிய அவனுக்கு மனம் சாந்தி அடையாது போலிருந்தது.

மீனுவும் தன் உள்ளத்தைச் சுவாமிநாதனிடம் பறிகொடுத்து விட்டாள். கண்ணுசாமியுடன் 'அரட்டை' அடிக்கும் நேரத்தைத் தவிர மற்றச் சமயங்களில் எல்லாம் சுவாமிநாதனுடன் தான் நடத்தப்போகும் இல்வாழ்க்கையைக் குறித்துக் கற்பனை செய்த வண்ணமிருப்பாள்.

இவர்களிருவரும் தம் பழகுவதில் முதலி



“ஏன் அண்ணே, பையனைப் போட்டு அடிக்கிறே?”

“என்னுடன் பிச்சை எடுக்க வர மாட்டானாம்; வெட்கமா யிருக்காம்; 'சம்பாதிக்கச் சாப்பிடப் போறேன்' என்கிறான் படவாப்பயல்!”

யாருக்கோ, பத்மாசனிக்கோ கொஞ்சமும் ஆட்சேபனை இல்லை.

## 3

மனிதன் நினைப்பதுபோல் எல்லாம் நடந்து விட்டால் கடவுள் ஒருவர் இருக்கிறார் என்பதை உலகம் அடியோடு மறந்து விடுமல்லவா? அதனால்தானோ என்னவோ, சம வெளியில் ஓடும் ஆற்றைப்போல் அமைதியாகச் சென்று கொண்டிருந்த முதலியாரின் வாழ்க்கையில் எதிர்பாராத சம்பவங்கள் எல்லாம் நடக்க ஆரம்பித்தன.

ஜுரம் என்று படுத்த பத்மாசனி, மூன்றே தினங்களில் 'அக்கடா' என்று தன் வாழ்க்கைப் பயணத்தை முடித்துக் கொண்டு மாயமாய் மறைந்து விட்டாள். முதலியாருக்குப் பத்மாசனி இறந்த துக்கம் கூட அவ்வளவு பெரிதாகப் படவில்லை. “மீனுவை இன்னொருவன் காலில் கட்டி விட்டால், கண்ணுவை எப்படிப் பராமரிப்பது? அவளும் இல்லாவிடில் அவன் உயிரை விட்டு விடுவானே?” என்ற கவலை அவரை உருக்கி வந்தது.

இரண்டாவது தாரமாக யாரையாவது மணம் செய்து கொள்ளும்படி முதலியாருக்குப் பலர் யோசனை கூறினர். எத்தனையோ பேர் தங்கள் பெண்களைக் கொடுக்கவும் தயாராக இருந்தனர். ஆனால் தன் சொந்த சுகத்திற்காக என்றால் அல்லவா, இதற்கெல்லாம் அவர் சம்மதிக்கப் போகிறார்?

“ஏன், உங்களுக்கென்ன அவ்வளவு வயதாகி விட்டது? மீனுவையே இரண்டாம் தாரமாகச் செய்து கொண்டு விட்டால் கண்ணுசாமிக்கு எவ்வளவு ஆதரவாக இருக்கும்?” என்று சிலர் அவர் காதில் மந்திரம் ஜெபிக்க ஆரம்பித்தனர்.

முதலியாருக்கு இது நல்ல யோசனை என்று தோன்றிற்று. அதோடு மீனுவின் பரிபூரண சௌந்தரியமும் அவருக்குச் சபலம் தட்டச் செய்து விட்டது. ஆனால் அவள் இதற்கு இணங்கமாட்டாள் என்பது அவருக்குத் தெரியும். அதனால் மெதுவாகப் பார்த்துக் கொள்ளலாம் என்று இருந்தார்.

## 4

ஸ்வாமிநாதனுக்கு அவனுடைய தாயாரிடமிருந்து கடிதம் வந்திருந்தது. அவளது நிலைமை கவலைக்கிடமாக இருப்பதாகவும், உடனே புறப்பட்டு வரும்படியும் அதில் கண்டிருந்தது. அவனும் முதலியாரிடம் விடை பெற்றுக் கொண்டு மூன்று நாள் ரஜாவில் உடனே புறப்பட்டுச் சென்றான்.

இரண்டு தினங்கள் கழித்துச் செட்டியார் பிராஞ்சுக் கடைக்குச் சென்று கணக்கு வழக்குகளைப் பரிசீலனை செய்தபோது, இருப்பில் ரூபாய் மூவாயிரத்தைக் காணோம்! செட்டியாருக்கு வந்த கோபமும் துக்கமும் இவ்வளவு அவ்வளவு அல்ல. இருபத்தெட்டு வருஷகாலமாக முதலியாரிடம் கடுகடுத்துப் பேசி யறியாத செட்டியார் இப்போது அவர்மீது எரிந்து விழுந்தார். “என்னிடமே வால் ஆட்டிய அந்தப் பயலை விட்டேனா பார்!” என்று உறுமினார்.

இந்தச் சம்பவம் முழுவதையும் முதலியார் தந்திமூலம் ஸ்வாமிநாதனுக்குத் தெரிவித்தார். அதோடு, பயப்பட வேண்டாமென்றும், மேற்கொண்டு செய்ய வேண்டிய காரியங்களைத் தாமே செய்வதாகவும் ஆறுதல் கூறியிருந்தார். தந்தியைப் படித்ததும் ஸ்வாமிநாதனுக்குத் தலை வெடிப்பது போலிருந்தது.

சந்தேகத்தின்பேரில் தன்னைக் கைது செய்ய 'வாரண்ட்' பிறப்பிக்கப்பட்டிருப்பதாகச் செய்தி ஸ்வாமிநாதனுக்கு எட்டியதும் சில தினங்கள் தலை மறைவாக இருப்பது என்று தீர்மானித்தான்.

ஸ்வாமிநாதன் விஷயம் மீனுவுக்கு எட்டியதும் அவளுக்குத் தன் தலைமீது ஏதோ பேரிடி விழுந்தது போலிருந்தது. அல்லும் பகலும் தான் கட்டிவந்த மனக்கோட்டை தகர்ந்து வருவதை நினைத்ததும் அவள்

உள்ளம் விம்மியது. அன்று முதல் அவளுடைய கலகலப்பெல்லாம் எங்கோ பறந்தோடி விட்டது. பசும்பொன் போன்ற அவளது மேனி வாடத் தொடங்கியது. அன்ன ஆகாரமும் சரியாக எடுத்துக் கொள்வதில்லை.

மீனுவிடம் காணப்பட்ட மாறுதல்கள் முதலியாருக்குத் தெரியாமலில்லை. அவரும் எத்தனையோ டாக்டர்களை அழைத்து வந்து பார்த்தார். சுவாமிநாதனுக்கு எந்த வித ஆபத்தும் ஏற்படாது என்று ஆறுதல் சொல்லியும் பார்த்தார். ஆனால் அவள் தேக நிலைமை சீர்திருந்துவதாகத் தெரியவில்லை. இதுவரை அங்கு மிங்கும் நடமாடிக் கொண்டிருந்தவள் இப்போது படுக்கையே சதமென்றாகி விட்டாள்.

நாளாக ஆக அவள் நிலைமை மோசமாகிக் கொண்டே வந்தது. இப்போது பேச்சும் நின்று போய் விட்டது. இடை யிடையில் எதையோ நினைத்துக் கொண்டு கண்ணீர் விடுவாள். அவ்வளவுதான்.

## 5

இரவு எட்டுமணி இருக்கும். மீனு ஆபத்தான நிலைமையில் இருக்கிறாள் என்பதை யார் மூலமோ கேள்விப்பட்டு சுவாமிநாதன் படபடப்புடன் ஓடி வந்தான். சதையெல்லாம் வற்றிக் கரைந்து எலும்புக் கூடாய்ப் போயிருந்த அவளைப் பார்த்ததும் 'மீனு!' என்று கதறி விட்டான்.

சிறிது நேரம் சென்றது. அவள் கண்கள் மெதுவாகத் திறந்தன. விழிகள் அவன் இருந்த திக்கில் சாய்ந்தன. அவைகளில் என்று மில்லாத பிரகாசம் ஜ்வலித்தது. ஆனால் மீண்டும் கண் இதழ்கள் குவிந்தன. கண்ணீர் பெருக்கெடுத்து ஓடிக் கொண்டிருந்தது.

சற்று நேரம் நிசப்தம். இந்த நிசப்தத்தையும் கலைத்துக் கொண்டு நாலைந்து காலடிச் சத்தங்கள் கேட்டன. எல்லாருடைய பார்வையும் வாசற்படியை நோக்கின. மறு நிமிஷம் சப் இன்ஸ்பெக்டர் ஒருவர் தமது கோஷ்டியுடன் உள்ளே நுழைந்தார்.

"நீர்தானா சுவாமிநாதன்? உம்மைக் கைது செய்ய உத்தரவு" என்று கூறி அவன் கரங்களில் விலங்குகளைப் பூட்டினார் சப் இன்ஸ்பெக்டர்.

இந்த முரட்டுச் சப்தத்தைக் கேட்டதும் திடுக்கிட்டுக் கண் விழித்துக் கொண்டாள் மீனு. நிலைமையை ஊகித்து அறிந்து கொள்ள அவளுக்கு ஒரு வினாடிகூடச் செல்லவில்லை. ஏதோ பேச அவள் வாய் துடி துடித்தது. ஆனால் வார்த்தைகள் வெளிவரவில்லை. அவள் சப் இன்ஸ்பெக்டரைப் பார்த்த பார்வை குற்றுயிராகக் கிடக்கும் ஒரு மான், புலியைப் பார்த்த மாதிரி பரிதாபகரமாக இருந்தது.

"உம்......புறப்படும்" என்று அதிகார தோரணையில் சப் இன்ஸ்பெக்டர் கத்தினார். சுவாமிநாதன் ஏதோ தூக்கத்திலிருந்து எழுந்து நடப்பவன்போல் அவரைப் பின் பற்றினான். மீனுவின் முகத்தில் பெருத்த வேதனை பரவியது. கண்களில் கண்ணீர் பெருகியது.

அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்த கண்ணுசாமி என்ன நினைத்தானோ என்னவோ, "அம்மா, நீ செத்துப் போகாதே" என்று கூச்சலிட்டான். இந்தக் கண்ணராவிக் காட்சியைப் பார்த்ததும் அனைவரும் 'ஓ'வென்று அழுது விட்டனர். கல் நெஞ்சரான முதலியாரும் கூடக் கண்ணீர் கொட்டி விட்டார்.

சப் இன்ஸ்பெக்டர் வெளிவாசலைக் கூடத் தாண்டி யிருக்க மாட்டார். "ஸார், நில்லுங்கள்!" என்று ஆவேசம் வந்தவர்போல் கத்தினார் முதலியார். அப்போது அவர் முகத்தில் ஒரு வித உறுதியும் தெளிவும் காணப்பட்டது.

"ஸார், நான்தான் குற்றவாளி. செட்டியாரின் பணம் பெட்டியில் இருக்கிறது. இதோ சாவி!"

இந்த வார்த்தைகளைத் தெளிவாக, அழுத்தமாக, கம்பீரமாக, அசாதாரண முக ஜ்வலிப்புடன் கூறினார் முதலியார்.

"கண்ணு, இனி உன் அம்மா பிழைத்துக் கொள்வாளடா!" என்று கூறியபோது அவருடைய குரல் கம்மி யிருந்தது.



(முதல் சிங்கம் இரண்டாம் சிங்கத்திடம்):— இந்த 'ரிங் மாஸ்டர்'ரின் சாட்டையைக் கண்டால் என்பாடு சிம்ம ஸ்வப்பனமா யிருக்கப்பா!

# "எளிய நடை வேண்டும்!"

ஸ்ரீ சுத்தானந்த பாரதி

ஐயர் புதுச்சேரிக்கு வந்ததுமே கம்ப ராமாயண ஆராய்ச்சி நடத்தப் புகுந்தார். இப்போது நமது ரசிகமணி டி. கே. ஸி. செய்யும் காரியத்தையே அவர் அந்தக் காலத்தில் செய்தார். அதனால் அவருக்கு வந்த ஆசீர்வாதங்களும் அஷ்டோத்திரங் களும் பல. பாரதியாருக்கு ஐயர் மூலமாகத் தான் கம்பனில் சுவை ஏற்பட்டது. ஐயர் கம்பனைப் படிக்கும்போது இவரும் "சபாஷ், பாண்டியா!" என்று குதிப்பதுண்டு. ஆனால் ஐயரைப்போல் பாரதியார் புத்தகத்தைத் துளைக்க மாட்டார். புத்தகம் படிக்கும் பொறுமை அவருக்குக் கிடையாது. அதற்குள் புதிய பாட்டுப் பாடிவிடுவார். ஐயர் சில புலவர் துணையைக் கொண்டு கம்பனை அடி முதல் ஆராய்ந்து வந்தார்.

ஐயர் நாட்டுப் படலத்தை ஒரு புலவருடன் பாடிக் கொண்டிருந்தார். அதில்

புதுப்புனல் குடையும் மாதர்
　பூவொடு காவி பூத்த
கதுப்புற வெறியே நாறும்
　கருங்கடற் றரங்க மென்றான்.

என்ற பாட்டு நடந்து கொண்டிருந்தபோது, பாரதியார் வெகு விரைவாக உள்ளே வந்தார்.

ஐயர் :—வரவேண்டும், பாரதி!

பாரதி :—வந்தேன் ஐயரே! கம்பனா? எங்கே, பார்ப்போம்!

பாரதியார் புத்தகத்தை வாங்கி, புதுப் புனல் என்ற பாட்டை ராகம்போட்டுப் படித்தார்.

பண்டிதர், பாரதியார் என்றால் இரண்டாந் தரமாக நினைப்பவர். இலக்கணந் தெரியாது, சங்கநூலைத் தொட்டதுகூடக் கிடையாது. இவரைக் 'கவி' என்கிறார்களே என்பது அவர் எண்ணம்.

பண்டிதர் :—தங்களைப் பெரிய கவிஞர் என்கிறார்களே! இச் செய்யுளுக்குப் பொருள் கூறும்!

பாரதி (கவியையும் பண்டிதரையும் மாறி மாறிப் பார்த்து) :—ஓய் பண்டிதரே, இது நீர் அர்த்தம் சொல்லவேண்டிய கவி. நமது கவி வேறு ரகம். கம்பன் இந்தக் காலத்திற்கு எழுதவில்லை.

பண்டிதர் :—உம்மை ஒன்று கடாவுகிறோம்.

பாரதி:—சை, கேட்கிறோம் என்னும்!

பண்டிதர்:—சரி, கேட்கிறோம். கம்பனில் மிக எளிய சொற்களேயன்றோ உள! அவற்றிற்கும் பொருள் கூறீராயின் உம்மைச் செய்யுட் புலவர் என்பதெங்ஙனமோ? நீர் தமிழ் பயின்றது யாண்டையோ?

பாரதி :—ஓய் ஓய் புலவரே, நிறுத்தும்! நான் கம்பனானால், இந்தக் காலத்தில் புதுப் புனலைக் குடைய மாட்டேன். புதுப்புனல் குளிக்கும் மாதர் என்பேன். கருங்கடற்றரங்கம் கதுப்புற என்கிறதே. நாற்றமாவது! காதைக் குடைகிறதே! கருங்கடல் தரங்கம் என்றால் என்ன மூழ்கிப் போயிற்று?

பண்டிதர் :—அஃது புணர்ச்சி விலக்கணத்திற்கு மாறாகவன்றோ முடியும்?

பாரதி :—ஐயா புலவரே, உமது புணர்ச்சி இலக்கணம் அடியோடு ஒழியப்போகிறது. இப்போதே மாற்றிக்கொள்ளும். காதைக் கடுமையாகப் பிடிக்கும் கறபுருக்கள் ஒழிய வேண்டும். தமிழ் இனிமை இனிமை, அதில் கடுமை உதவாது.

பண்டிதர் :—உமக்கு விளக்காவிடின் பெரியார் இலக்கணத்திற்கே பழுது சொல்வீரோ?

பாரதி :—ஐயா, புலவரே! நாம் கம்பனைக் குறை சொல்லவில்லை. இலக்கணத்தைக் கட்டிக்கொண்டு மஹாராசனாயிரும். இந்தக் காலத்திற்கு எல்லாருக்கும் புரியும்படியான எளியநடை வேண்டும். நம்மவரில் படித்தவர் நூற்றுக்குப் பத்து. பண்டித நடையில் பேசினால் நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது பேருக்கு லாபம் தூக்கமே யாகும். தெளிவாகப் பேசுகிறபடியே எழுதினால் எல்லாருக்கும் விஷயம் புரியும். உணர்ச்சி யுண்டாகும்.

பண்டிதர் :—யாம் ஒப்பேம். நீர் இந்த நாட்டுப் படலத்தினும் உணர்ச்சி ததும்ப நாட்டைப் பாடுவீரோ?

பாரதி ஹூம் என்றெழுந்தார். வலது காலை முன்வைத்து நின்றார். வலது கையை மார்பில் வைத்தார். "பாருக்குள்ளே நல்ல நாடு, நல்ல நாடு, நல்ல நாடு எங்கள் பாரத நாடு" என்று சண்டமாருதமாக இருபது நிமிஷம் கூடத்தில் தாவித் தாவிப் பாடினார்.

வள்ளுவர், இளங்கோ, கம்பன் ஆகிய மூவரிடமும் பாரதியாருக்கு அன்புண்டு. ஆனால் இந்தக் காலத்தில் தெளிவான எளிய பேச்சுத் தமிழில் எழுதவேண்டும் என்பதே அவர் கருத்து. பாரதியார் எப்படிப் பேசினாரோ அப்படியே எழுதினார். எப்படி எழுதினாரோ அப்படியே பேசவும் பேசினார்.



# ஆடல் பாடல்

"கர்நாடகம்"



## எட்டயபுரம் கச்சேரிகள்

எட்டயபுரத்தில் அமோகமாய் நடந்த பாரதி ஞாபகச் சின்ன அஸ்திவார விழாவை யொட்டி ஜூன் மீ 2உ 3உகளில் ஐந்து சங்கீதக் கச்சேரிகள் நடந்தன. சாதாரண மாய், "ஐந்துக்கு இரண்டு பழுதில்லை" என்று சொல்வார்கள். ஆனால் பாரதியார் விஷயத்தில் எல்லாம் 100-க்கு 100 பங்கு வெற்றியாகவே நடந்திருப்பது போல், எட்டயபுரத்தில் ஐந்து கச்சேரிகளுமே அபாரமாய் அமைந்து விட்டன.

### கான சரஸ்வதி பட்டம்மாள்

நீண்ட காலமாகக் கச்சேரிகளில் பாரதியார் பாடல்களை அதிகமாகப் பாடிச் சங்கீத ரசிகர்களையும் தமிழபிமானிகளையும் மகிழ்வித்து வந்திருக்கும் தமிழ் நாட்டுப் பாடகர் - பாடகிகளில் ஸ்ரீமதி பட்டம்மாள் ஒருவர். எனவே, பாரதி விழாவில் முதல் நாள் முதல் கச்சேரியை அவர் செய்தது மிகவும் பொருத்தமாய் அமைந்தது.



மதுரை மணி ஐயர்

"பொழுது புலர்ந்தது" என்னும் பாரதத் தாயின் பள்ளி எழுச்சிப் பாடலுடனே கச்சேரி ஆரம்பமாயிற்று.

சங்கராபரண ஆலாபனமும், "தூக்கிய திருவடி" கீர்த்தனமும், கச்சேரியின் சிகரம் இதுதான் என்று எண்ணும்படி செய்தன. ஆனால், அப்பால் வந்த கரகரப்ரியா ஆலாபனம் 'தூக்கிய திருவடி'யைக்கூடத் தூக்கி அடித்துவிட்டது!

எதிர்பார்த்ததைக் காட்டிலும் ஏரான மான ஜனக்கூட்டம் (சுமார் ஏழு எட்டாயிரம் பேர்) சேர்ந்துவிட்டபடியால், பந்தலில் அவரவர்களுக்கென்று ஒதுக்கப்பட்டிருந்த இடவரையறை யெல்லாம் போய்த் தலைவர்கள் உட்பட எல்லாரும் ரொம்பவும் நெருக்கி யடித்துக்கொண்டு உட்கார வேண்டியதாயிற்று. பலர் நிற்க வேண்டியதாகவும் ஏற்பட்டது. இதனாலெல்லாம் சபையில் அமைதி ஏற்படாமல் கொஞ்சம் ஆரவாரமாகவே இருந்து வந்தபடியால், கச்சேரி நடுவில் கலையாமல் பூர்த்தியாக வேண்டுமே என்ற கவலை ஒரு சமயம் ஏற்பட்டிருந்தது.

ஆனால் காம்போதி ராகமும் பல்லவியும் முடிந்து ஸ்ரீமதி பட்டம்மாள்,

"தொன்றுநிகழ்ந்த தனைத்து முணர்ந்திடும்"

என்னும் "எங்கள் தாய்"ப் பாட்டை எடுத்ததும் சபையில் பரிபூரண அமைதியும் நிச்சப்தமும் நிலவத் தொடங்கியது.

சங்கதிகளோ வேலைப்பாடுகளோ அதிகம் இல்லாமல் ஸ்ரீமதி பட்டம்மாள் மேற்படி பாட்டின் வார்த்தைகளைத் தெளிவாகவும் அழுத்தமாகவும் உச்சரித்துப் பாடி வரும்போது, பாடல், அதன் மெட்டு, பாடுகிறவர், கேட்கிறவர் என்பதெல்லாம் மறந்து பாரதத் தாயையே நமது மனக்கண் முன்னால் காண்கிறோம். கண்டு, அவளுடைய பெருமைகளிலும் சிறப்புக்களிலும் ஈடுபட்டு விடுகின்றோம். இந்தப் பாட்டைக் குறித்து ராஜாஜி மறுநாள் பிரசங்கத்தில் குறிப்பிடும்படி நேர்ந்தது. "பாரதி பாட்டுக்களுக்குச் சங்கீத வித்வான்கள் மெட்டுப் போட்டுப் பாடலாமா என்று சிலர் சந்தேகப்படுகிறார்கள். இன்று பாரதத் தாயைப் பற்றிய பாட்டைக் கேட்டோம். அந்தப் பாட்டுக்காகவே ஏற்பட்ட மெட்டு என்றுதான் தோன்றியது. அவ்வளவு பொருத்தமாயிருந்தது" என்று ராஜாஜி அத்தாட்சி யளித்தார்.

நாமக்கல் கவிஞர் இந்த வைபவத்துக்காகப் பாடிய பாடல் ஒன்றை ராகமாலிகையாக ஸ்ரீமதி பட்டம்மாள் பாடியது பெரிதும் சபையோரின் மனத்தைக் கவர்ந்தது. "என்று தணியும்" "ஆசை முகம்" முதலிய பாரதியார் பாடல்களையும், "ஆடுவோட்டே" பாடலையும் பாடிய பிறகு அளவற்ற உற்சாகத்துக்கு இடையே "வாழிய செந்தமிழ்"ப் பாடலோடு கச்சேரியை முடித்தார்.



ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை

பாரதியார் விழாவுக்கு ரொம்ப நல்ல ஆரம்பம் என்ற ஒருமுகமான அபிப்பிராயத்துடன் சபை கலைந்தது.

பிடில் ஸ்ரீ கோவிந்தசாமி நாயக்கர், மிருதங்கம் குஞ்சமணி, கடம் ஆலங்குடி ராமச்சந்திரன் ஆகியவர்கள் பக்க வாத்தியம் வாசித்துச் சிறப்பித்தார்கள்.

## கானகலாதர மணி ஐயர்

இரவு 11-30 மணிக்கு இந்தத் திருவிழாவின் மிகப் பெரிய கச்சேரிக்காக மீண்டும் சபை கூடியது.

கும்பகோணம் ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை, ஸ்ரீ பழனி சுப்பிரமணியப் பிள்ளை இவர்களுடைய பக்க வாத்தியங்களுடன் மதுரை மணி ஐயரின் கச்சேரி.

காலை 2-30 வரையில் மேற்படி கச்சேரி நடந்தது. மேலும் தொடர்ந்து பொழுது கன்றாய்ப் புலரும் வரையில் நடந்திருந்தாலும் சபையோர் கலையாமல் கேட்டுக் கொண்டிருப்பார்கள் என்று தோன்றியது. அப்படி மெய்ம்மறந்து பரவசமாய்க் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

வித்வான்களும் அவ்வாறே ஆவேசம் கொண்டவர்களைப் போல்தான் இந்தக் கைங்கரியக் கச்சேரியில் ஈடுபட்டிருந்தார்கள்.



தஞ்சாவூர் நாணு

"தத்வமறிய தரமா? மூலாதார ஞானபதே!" என்ற ரீதிகௌளையில் மணி ஐயர் முதல் கீர்த்தனம் எடுத்த போது, நாத வெள்ளமானது மூலாதாரத்திலிருந்தே பொங்கிப் பெருகுவது போலிருந்தது.

ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார்மேல் பாடப்பட்ட "பாமாலைக் கிணையுண்டோ?" என்னும் கீர்த்தனம் அடுத்தாற்போல் சபையோரின் செவிகளையும் உள்ளங்களையும் நிறைத்தது. மணி ஐயரின் சங்கீதத்துக்கு இணை உண்டோ என்று எண்ணச் செய்தது.

வாசஸ்பதி, பைரவி, காம்போதி ஆகிய ராகங்களை இரு வித்வான்களும் போட்டி போட்டுக்கொண்டு 'பாடிய' போது, மணிகளும் மாணிக்கங்களும் பந்தலில் மழையாகப் பொழிந்து கொண்டிருந்தன.

(ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை அன்று பிடில் வாசித்ததாகவே தெரியவில்லை; பாட்டாகவே பாடிப் பொழிந்து விட்டார்.)

"காணக் கண்கோடி" அநுபல்லவியில் ராகமாலிகை ஸ்வரங்கள் ஆரம்பமான பிறகு, வித்வான்கள் மூன்று ஸ்தாயியில் பதினொன்று ஸ்வரங்களில் சஞ்சரித்தார்கள். சபையோர்களோ இந்தப் பூவுலகத்தை மறந்து பதினாலு உலகங்களிலும் சஞ்சரித்துக் கொண்டிருந்தார்கள். அநேகம் பேருக்குத் தாங்கள் எட்டயபுரத்தில் பொழுது விடிந்தால் நடக்கப் போகும் பாரதியார் ஞாபகச் சின்ன விழாவுக்காக வந்திருக்கிறோம் என்பதே மறந்து போய்விட்டது. இன்னும் சிலருக்கு, "காணக் கண்கோடி" கீர்த்தனையில் அநுபல்லவிக்குப் பிறகு சரணம் வருகிறது என்பதும் மறந்து விட்டது. எனவே, பாடகர் சரணத்தை எடுத்ததும் அவர்களுக்குத் தூக்கிவாரிப் போட்டது. கச்சேரி கேட்கின்றோம் என்பதை அப்போதுதான் நினைவு கூர்ந்து திமிர்ந்து உட்கார்ந்தார்கள்.



ஸ்ரீ வேதாசலம் செட்டியார்

கடைசியில், "சொல்ல வல்லாயோ கிளியே" "செந்தமிழ் நாடு" ஆகிய பாரதியாரின் பாடல்களைக் கர்ண மிர்தமாகப் பாடி மணி ஐயர் கச்சேரியை முடித்தார்.



ஸ்ரீ டி. டி. சங்கரய்யர்

கச்சேரியின் போது மணி ஐயரின் நாத வெள்ளத்துக்கு இடையூறின்றி ஆங்காங்கே சப்த ஜால வித்தைகளைச் செய்து கொண்டிருந்த பழனி சுப்பிரமணிய பிள்ளையும் மிருதங்கத்தை உறையில் போட்டார்.

## கனம் வருண பகவான்

பாரதியாரின் ஞாபகச் சின்ன விழா [illegible] காலையில் நடந்தது. அன்று மாலையில் அந்த விழாவின் ஞாபகார்த்தமாக எட்டயபுரம் சமஸ்தான அரண்மனையைப் பொது ஜனங்கள் கைப்பற்றிப் பொது உடைமை ஆக்கிக் கொண்டார்கள்!

இந்தக் காரியத்தில் பொது ஜனங்களுக்குத் தூண்டுகோலா யிருந்தவர் சாக்ஷாத் வருணபகவான்; முக்கிய உடந்தையாக இருந்தவர் எட்டயபுரம் மகாராஜாவின் மைத்துனர் ஸ்ரீ அமிர்தசாமி அவர்கள்.

அன்று கால வைபவத்தில் கடைசியாகப் பேசிய ஸ்ரீ கே.பி.எஸ். நாராயணன் வருண பகவானுக்கு நன்றி செலுத்தப் போக, நன்றியை நேரில் பெற்றுக்கொண்டு போவ தற்குத்தானோ என்னமோ, சுமார் நாலு மணிக்கு வருணபகவான் இடி முழக்கத்துடன் மேகவாகனத்தில் வந்து எட்டயபுரத்தை எட்டிப் பார்த்தார்!

ஒரு வேளை பலமாக மழை பெய்தால், மாலைக் கச்சேரிகள் கலைந்துவிடுமே, இவ்வளவு நன்றாய் நடந்த வைபவத்துக்கு அந்தக் குறை ஏற்படக் கூடாதே என்று கவலைப் பட்டுக் கொண்டிருந்தபோது, மகாராஜாவின் மைத்துனர் ஸ்ரீ அமிர்தசாமி வந்து, "கச்சேரியை அரண்மனையிலேயே வைத்து விடலாமே?" என்னும் அமிர்தம் போன்ற மொழியைச் சொன்னார். இந்த யோசனைக்குப் பல 'சபாஷ்'கள் கிடைத்தன.



ஆலங்குடி ராமச்சந்திரன்

எனவே, அரண்மனை அலங்கார மண்டபத்தில் கச்சேரிகள் நடைபெற்றன. மண்டபத்திற்குள்ளே கூடியிருந்தவர்கள் போக, அரண்மனை வாசலில் ஆயிரக் கணக்கான ஜனங்கள் அமர்ந்து ஒலிபெருக்கிகளின் மூலம்பொழிந்த கான வர்ஷத்தைக் கேட்டு மகிழ்ந்தார்கள். (கான வர்ஷத்தைத் தவிர மற்றப்படி வான வர்ஷம் ஏற்படவில்லை.)



ஸ்ரீ கோவிந்தசாமி நாயக்கர்

## மூன்று கச்சேரிகள்

திருவிழாப் பந்தலில் ராஜாஜி அன்று காலையில் ஒரு அஸ்திவாரம் போட்டார். அரண்மனை மண்டபத்தில் அன்று மாலையில் ஸ்ரீ வேதாசலம் செட்டியார் பல அஸ்திவாரங்கள் போட்டார். ஒவ்வொரு ராக ஆலாபனத்தையும் சங்கீத வித்வான் வேதாசலம் செட்டியார் ஆழமாயும் அகலமாயும் அஸ்திவாரம் போட்டுக்கொண்டு தொடங்கினார். அஸ்திவாரம் போட்டுச் சொற்ப நேரத்துக்குள் விமரிசையாக மாடமாளிகைகளைக் கட்டி விட்டார். அன்று கரகரப்ரியா, தோடி ஆகிய இரண்டு ராகங்களையும் ஸ்ரீ வேதாசலம் விஸ்தாரமான அஸ்திவாரத்துடன் தொடங்கி அழகாகக் கட்டி முடித்தார். பல புதிய தமிழ் உருப்படிகளை நிறைவாகக் கையாண்டு பாடினார்.

ஸ்ரீ வேதாசலம் சமீபகாலத்தில் பிரசித்தி பெற்று வரும் இளம் பாடகர்களில் ஒருவர். பாரதியாரின் ஆசீர்வாதத்தினால் மேலும் மேலும் இவருடைய வித்தையும் புகழும் ஓங்கி வளரு மென்று நம்புகிறேன்.

* * *

சங்கீத மேடையிலிருந்து ஸ்ரீ வேதாசலம் செட்டியார் இறங்கிவந்து சபையில் அமர்ந்ததும், ஸ்ரீ டி. கே. ரங்காச்சாரி அங்கு ஏறி அமர்ந்ததும் சரியாயிருந்தன. ஸ்ரீ ரங்காச்சாரி மேடையில் உட்காரும்போதே, சபையில் இருந்த நிலவர்களில் சிலர் அவருடைய தோற்றத்தைக் கொண்டு,

"பாடகர் தஞ்சாவூர்க்காரர்போலிருக்கிறது!" என்று பேசிக் கொண்டார்கள்.

ஸ்ரீ சங்கராச்சாரி கமாச ராகத்தில் ஒரு பிர்க்கா சுழற்றியவுடனே, "இது தஞ்சாவூர் பாணி சங்கீதந்தான்" என்று சபையிலிருந்த அநுபவஸ்தர்கள் பேசிக் கொண்டார்கள். பாடகர், முதல் பாட்டாக,

"பாமாலைக் கிணையுண்டோ?
ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியே!..."

என்று கம்பீரமாகவும் அழுத்தமாகவும் ஆரம்பித்து, 'பாரதி'யை ஒரு குலுக்குக் குலுக்கி, 'யே' என்பதில் கார்வை கொடுத்ததும், சபையில் சட சட என்று கரகோஷம் ஏற்பட்டு விட்டது.

வித்வானின் பாட்டு எப்படியிருந்த போதிலும் சரி, சமயோசிதம் தெரிந்த புத்திமான் அவர் என்று சபையினர் ஒருமுகமாகத் தீர்மானித்தார்கள்.

அப்புறம் "தமிழ்மணம் கமழவேண்டும்" என்ற மணி சங்கு பாட்டும் சபையின் நோக்கத்துக்குப் பொருத்தமாயிருந்தபடியால் பெருமதிப்பைப் பெற்றது.

ஸ்ரீ சங்காச்சாரியாரின் சங்கீதமும் அவருடைய புத்திசாலித்தனத்துக்கு ஈடானதுதான் என்று பைரவி ராக ஆலாபனத்திலும் "யாரோ இவர் யாரோ" கீர்த்தன சிரவல் ஸ்வரத்திலும் தெரிய வந்தது.

கடைசியில் அவர் பாடிய பாரதியார் பாடல்களும் பெரிதும் பாராட்டப் பெற்றன.

ஸ்ரீ டி. கே. சங்காச்சாரியாரின் பாட்டுக்கு மயிலாப்பூர் அனந்தராமன் பிடில் வாசித்தார். மைலாட்டூர் ராமச்சந்திரன் மிருதங்கம் வாசித்தார்.

இந்தப் பாரதி கைங்கரியக் கச்சேரிகளில் இரண்டு கச்சேரிகளுக்குப் பக்க வாத்தியங்கள் வாசித்த புண்ணியத்தை இருவர் கட்டிக் கொண்டார்கள். ஒருவர் பிடில் வித்வான் சங்கரய்யர்; இன்னொருவர் மிருதங்கம் மைலாட்டூர் ராமச்சந்திரன்.

இருவருக்கும் பாரதியாரின் அருளினால் பெயரும் புகழும் பொருளும் பெருகி வளரவேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்.



பழனி சுப்புடு

* * *

எட்டயபுரம் விழாவில் கடைசி கச்சேரி "தஞ்சாவூர் ராஜு" என்று அழைக்கப்பட்டு வரும் தஞ்சாவூர் ஸ்ரீ லக்ஷ்மி நாராயண பாகவதரின் கச்சேரி. பாரதி திருவிழாவில் தஞ்சாவூர் ராஜு தமது சரீரத்தினால் மட்டும் கைங்கரியம் செய்யவில்லை. சரீரம், மனம், ஆத்மா ஆகிய திரிகரணங்களினாலும் கைங்கரியம் செய்தார்.

ஏற்கெனவே பலதடவை அவருடைய கச்சேரியை நான் கேட்டிருக்கிறபடியால், இன்றைக்குத் தொண்டை அவ்வளவு ஒத்துழைக்கவில்லை—கொஞ்சம் கட்டியிருக்கிறது—என்பது எனக்குத் தெரிந்தது.

தொண்டை சிறிது கட்டியிருந்த காரணத்தினாலேயே தஞ்சாவூர் ராஜு, "அடாடா! பாரதியார் கைங்கரியத்திற்கு இந்தத் தடை ஏற்பட்டு விட்டதே!" என்ற தாபமும், உணர்ச்சியும் பொங்கப் பாடினார். உணர்ச்சியின் வேகத்துக்கு முன்னால் தொண்டைக் கட்டு எம்மாத்திரம்? எனவே,

"பாரதியார் விழாவில் கச்சேரி செய்த கடைசிப் பாடகர் தஞ்சாவூர் லக்ஷ்மிநாராயண பாகவதர். அதுவே அந்தத் திருவிழாவில் நட்சத்திரக் கச்சேரியாகவுமிருந்தது" என்று "ஹிந்துஸ்தான்" பத்திரிகையின் விமரிசகர் அத்தாட்சி தரும்படியாகக் கச்சேரி அமைந்து விட்டது.

"ரீதேய மனமகிழ்கொடு" என்னும் ராமஸ்வாமி சிவன் கீர்த்தனமும், "தீராத விளையாட்டுப் பிள்ளை" என்ற பாரதியார் பாடலும் அன்று தஞ்சாவூர் ராஜு கச்சேரியில் சிகரமாயிருந்தன.

* * *

இந்த விழாவில் ஈடுபட்ட பாடகர்கள், பக்க வாத்தியக்காரர்கள் எல்லாரும் பிரதிப் பிரயோஜனத்தை எதிர்பாராமல் கைங்கரியமாகவே செய்தார்கள். ஆனால் தஞ்சாவூர் ராஜுவுக்கு மட்டும் எதிர்பாராதபடி ஒரு



ஸ்ரீ முருக பூபதி

பிரதிப் பிரயோஜனம் கிடைத்தது! அவருடைய அபிமானியும் பாரதி பக்தருமான ஒரு நண்பர் கச்சேரி முடிவில் பாடகருக்கு ஒரு பரிசு வழங்கும்படி கொடுத்தார். அந்தப் பரிசைப் பாடகரிடம் கொடுக்க ஒப்புக் கொண்டவரின் பாடு சங்கடமாய்ப் போய் விட்டது. ஏனெனில், பரிசைப் பாடகரிடம் கொடுக்கவே அவருக்கு மனம் வரவில்லை. தாமே வைத்துக் கொண்டு விடலாமா என்றே அந்த மனுஷருக்கு ஆசை உண்டாகி விட்டது! இதைப் பகிரங்கமாக அவர் சபையோருக்குத் தெரிவித்து விட்டு, "போனால் போகிறது; கொடுக்கிறேன்!" என்று கொடுத்தார்.

அந்தப் பரிசு, "பாரதியார் பாடல்கள்" அடங்கிய புத்தகந்தான்!

தஞ்சாவூர் சாமு இதற்கு முன் எத்தனையோ கச்சேரிகளில் எத்தனையோ பணமும் பொருளும் பரிசு பெற்றிருப்பார். ஆனால், அவை எல்லாவற்றிலும் இந்தப் "பாரதியார் பாடல்" பரிசையே மதிப்பு வாய்ந்த பொக்கிஷமாக எண்ணித் தஞ்சாவூர் சாமு போற்றுவார் என்று நம்புகிறேன்.

• • •

மேற்படி கடைசிக் கச்சேரியில் பிடில் வித்வான் ஸ்ரீ சங்கரய்யரும் மிருதங்கம் ஸ்ரீ முருகபூபதியும் பக்கவாத்தியம் வாசித்தார்கள்.

பாடகரின் சாரீரம் கட்டி யிருப்பது கூடத் தெரியாதபடி ஸ்ரீ சங்கரய்யர் அமோகமாகப் பிடில் வாசித்தார்.

ஸ்ரீ முருகபூபதி அன்று வாசித்த தனி ஆவர்த்தனத்தைப் பற்றி அதிகமாக ஒன்றும் சொல்வதற்கில்லை. மறுபடியும் எட்டயபுரம் அரண்மனையில் கச்சேரி நடந்த மண்டபத்துக்கு நான் போகும்போது, ஸ்ரீ முருகபூபதியின் மிருதங்கத்தின் கம்பீர மதுரநாதம் இன்னும் அங்கே அலைமோதிக் கொண்டு கேட்குமானால், சிறிதும் எனக்கு ஆச்சரியமாயிராது!



# ஏமாந்த பாலு

ராஜி

பாலு மிகவும் நல்ல பையன் தான். ஆனால் வீட்டில் விஷமம் செய்ய ஆரம்பித்து விட்டால் போதும் போதும் என்று ஆகிவிடும். அவன் தாயாருக்கு அவன் செல்லப் பிள்ளை. அதனால் பாலு என்ன விஷமம் செய்தாலும் அவன் தாயார் ஒன்றும் சொல்ல மாட்டாள். பாலுவின் தகப்பனாருக்கும் பாலு மீது பிரியம்தான். ஆனால் பாலு அனாவசியமாகச் செய்யும் விஷமங்களைக் கண்டால் அவருக்கு மிகவும் கோபம் வரும். அவர் கையில் எது இருந்தாலும் கவனிக்காமல் பாலுவை அடித்து விடுவார். மனைவி வந்து சமாதானப் படுத்தினால்தான் அவர் கோபம் தணியும்.

ஆபீஸிலிருந்து அப்பா வந்து விட்டார் என்று தெரிந்தவுடன் விளையாடிக் கொண்டிருக்கும் பாலு உள்ளே ஓடிப்போய்ப் புஸ்தகம் படிப்பதுபோல் பாசாங்கு செய்வான். "இரு இரு. அப்பா வந்தவுடன் சொல்லுகிறேன்" என்று யாராவது சொன்னால் பாலு பெட்டிப் பாம்பு போல் சாதுவாக இருப்பான்.

ஒரு நாள் பாலு பள்ளிக்கூடம் விட்டுத் திரும்பியவுடன் ரப்பர் பந்தை எடுத்துக்கொண்டு உள்ளே விளையாட ஆரம்பித்தான். அதைப் பார்த்த பாலுவின் தாயார் "பாலு! பந்தை வைத்துக்கொண்டு உள்ளே விளையாடாதே. வாசல் பக்கம் போய் விளையாடு" என்று பலமுறை சொல்லியும் கேட்கவில்லை.

அப்புறம் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் 'சடால்' என்று பல கண்ணாடித் துண்டுகள் கீழே விழுவது போல ஓர் பலத்த ஓசை கேட்டது. "அடாடா! நான் நினைத்தபடி ஆகி விட்டதா?" என்று மேஜையண்டை ஓடி வந்து பார்த்தாள் பாலுவின் தாயார். மேஜையின் மீது வைத்திருந்த விலை உயர்ந்த கண்ணாடி விளக்கு, பந்து பட்டுக் கீழே விழுந்து சுக்கு நூறாகிக் கிடந்தது.

"பாலு, நான் பலமுறை 'கூடத்தில் பந்து ஆடாதே' என்று சொல்லியும் நீ கேட்கவில்லை; விலை உயர்ந்த இந்தக் கண்ணாடி விளக்கை உடைத்து விட்டாய். உன் தகப்பனார் வந்தால் உன்னை லேசில் விடப்போவதில்லை. அவர் ஆபீஸிலிருந்து வரட்டும். அப்பாவிடம் சொல்லி உன்னை என்னபண்ணுகிறேன், பார்!" என்று கோபித்துக் கொண்டே மறுபடியும் சமையலறைக்குச் சென்றாள்.

பாலுவுக்கு என்ன செய்வது என்று ஒன்றும் புரியவில்லை. தன் தகப்பனார் வந்தால் தனக்குச் சரியான உதை கிடைக்கும் என்று அவனுக்குத் தெரியும். தன் தகப்பனார் ஆபீஸிலிருந்து வரும்பொழுது அவர் எதிரில் நிற்கக்









கூடாது என்று தோட்டத்திற்கு ஓடோடியும் சென்று ஒரு மரத்தின் பின்னால் ஒளிந்து கொண்டான்.

* * *

"பாலு! பாலு!" என்று உரத்த சப்தத்துடன் யாரோ கூப்பிடவே பாலு எட்டிப் பார்த்தான். பாலுவுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவன் தகப்பனார் அங்கே நின்று கொண்டிருந்தார். அவர் முகக் குறிப்பிலிருந்து அவர் மிகவும் கோபமாக இருக்கிறார் என்று பாலு எளிதில் அறிந்து கொண்டான். அதுவுமல்லாமல் தன் தகப்பனாரின் வலது கையில் ஒரு செருப்பு இருப்பதையும் பார்த்து விட்டான். அவனுக்கு உடல் நடுங்கிற்று. தன் தகப்பனார் கோபத்தில் கையில் எது அகப்பட்டதோ அதனால் அடித்து விடுவார் என்று அவனுக்குத் தெரியும். அதனால் பயந்து மறுபடியும் ஒளிந்து கொண்டான். ஆனால் பாலுவின் தகப்பனார் பாலுவை விடுவதாக இல்லை. "பாலு, பாலு!" என்று மறுபடியும் கூப்பிட்டுத் தோட்டம் முழுவதும் தேட ஆரம்பித்தார்.

துரதிருஷ்டவசமாக பாலு ஒளிந்து கொண்டிருப்பதைப் பார்த்து விட்டார். கையில் ஒரு செருப்புடன் பாலுவிடம் நெருங்க ஆரம்பித்தார். தன் தகப்பனாரிடம் இப்பொழுது அகப்பட்டால் செருப்பினால் சரியான உதை கிடைக்கும் என்று தெரிந்த பாலு ஓட ஆரம்பித்தான். ஆனால் பாலுவின் தகப்பனாரா விடுபவர்? அவரும் பாலுவைக் கையில் செருப்புடன் துரத்த ஆரம்பித்தார். வெகு தூரம் இரண்டு பேரும் ஓடினார்கள். கடைசியில் பாலு அவன் தகப்பனார் கையில் அகப்பட்டான். நடுங்கியபடியே நின்றான். அப்பொழுது அவன் தகப்பனார் "பாலு, ஏன் இப்படி ஓடினாய்? ஏன் பயந்து கொண்டே நிற்கிறாய்? நான் உன்னைத் தேடிக் கொண்டுதான் வந்தேன். இன்று காலை நான் வாங்கிய புதிய செருப்புகளில் இந்தச் செருப்புதான் இருக்கிறது. இடதுகால் செருப்பைக் காணவில்லை. நீ பார்த்தாயா?" என்று கேட்டார். பாலுவுக்கு அப்பொழுதுதான் உயிர் வந்தது. அடாடா! அனாவசியமாகப் பயந்து ஓடினோமே என்று வருத்தப்பட்டான். விளக்கு உடைந்ததற்காக அப்பா தன்னைக் கண்டிக்கவே இல்லை என்பதற்காகச் சந்தோஷப் பட்டான். ஆனால், அவன் தாயார் விளக்கைத் தானே உடைத்து விட்டதாகத் தகப்பனாரிடம் சொல்லி அவன் அடிபடாமல் காப்பாற்றி விட்டாள் என்பது அவனுக்குத் தெரியாது.

# நீலகிரிப் பிரயாணம்

பி. வி., சுப்பிரமணியன்

ராஜகோபாலனுடைய மனைவி கமலாவுக்கு உடம்பு சரியாயில்லாமலிருந்தது. நீலகிரிக்கு அவளைக் கூட்டிக்கொண்டு போனால் நல்லதென்று டாக்டர்கள் சொன்னார்கள். டாக்டர்கள் அப்படிச் சொன்னதுதான் தாமதம். அன்றைக்குச் சாயங்காலம் நடந்த விஷயங்களை ராஜகோபாலனால் மறக்கவே முடியவில்லை. அவை மறுபடியும் மறுபடியும் அவன் கண்கள் முன்னால் சுழன்று கொண்டிருந்தன. வீட்டில் பிரமாதமான சண்டை; வீடு, வீடாக இல்லை.

ஐந்து வருஷங்களாய் அதே யுத்தம்—கமலாவை ராஜகோபாலன் கல்யாணம் செய்துகொண்ட நாள் முதற் கொண்டு. அதற்கு முதல் காரணம் தாயார், அவன் தங்கை வழியில் யாரோ ஒரு பெண்ணை அவனுக்காகப் பேசித் தவறிப் போனதுதான். தாயாருக்குப் படித்த பெண்ணைக் கண்டால் பிடிக்கவில்லை என்பதற்காகத் தன்னுடைய உணர்ச்சிகளை மாற்றிக்கொள்ள ராஜு விரும்பவில்லை. அன்று முதற் கொண்டு அம்மா, தம்பி சங்கரன் முதலியவர்கள் ஒரு கட்சி; ராஜு ஒரு கட்சி.

இரண்டாவது காரணம், திடீரென்று கமலாவுக்கு ஏற்பட்ட நோய்தான். அவளுடைய வைத்தியத்திற்காக ராஜகோபாலன் ஐந்நூறு ரூபாய் வரையில் செலவு செய்து விட்டான். அவன் தாயாருக்குக் கோபம் பொத்துக்கொண்டு வந்துவிட்டது.

“நான் ‘அந்தப் பெண் வேண்டாம், வேண்டாம்’ என்று கரடியாகக் கத்தினேன். என் பேச்சு ஒருவர் காதிலும் ஏறவில்லையே! தினம் காலையில் எழுந்ததும் இருமல், தும்மல் என்று சோனையைத் தூக்கிக்கொண்டு ஆஸ்பத்திரிக்கு யார் கிளப்புகிறது? படிப்பு, படிப்பு என்று போய் ஸ்ரீதேவியைப் பிடித்துக் கொண்டு வந்தானே — அனுபவிக்கட்டும்” என்று அவள் சந்தடி சாக்கில் வெளுத்து வாங்கினாள்.

தானாகக் கமலாவைக் கல்யாணம் செய்து கொண்டதற்காக ராஜகோபாலன் கஷ்டம் அனுபவிக்க வேண்டியதுதான். ஆனால் இப்படிப்பட்ட தாயாரைப் பெற்றதற்கு என்ன செய்கிறது? அதற்குக்கூட அனுபவிக்கத்தான் வேண்டுமல்லவா? ஆனால் இதற்கெல்லாம் காரணம் யார்?

இந்தக் கேள்வியினால் உண்டான விபரீத முடிவு, கமலாவின் தலையில் போய் விழுந்தது. அவளை அவன் கல்யாணம் செய்து கொண்டிராவிட்டால், இவ்வளவு சண்டைகளும் சச்சரவுகளும் சேராது. இதை நினைத்தவுடன் ராஜகோபாலனுக்குத் தாங்க முடியாத கோபம் வந்தது. “இவளைப் பிறந்தகத்துக்கு அனுப்பி விட்டால் எல்லாச் சிக்கல்களும் தீர்ந்து விடும்” என்ற எண்ணம் அவன் மனதில் உதித்தது. இதன் காரணமாக, நீலகிரிக்குப் புறப்படுவதாக இருந்த கமலா, கிராமாந்தரத்திலிருந்த அவளுடைய பிறந்தகத்துக்குப் புறப்பட்டாள்.

2

வண்டி கண்ணுக்கு எட்டாத தூரம் போகும் வரையில் அதைப் பார்த்துக் கொண்டே ராஜகோபாலன் நின்றுகொண்டிருந்தான். “நான் ஏன் போகவேண்டும்? உங்கள் கிட்டே இருந்தாலே உடம்பு எனக்குப் பாதி சரியாகப் போய்விடுமே” என்று அவள் கெஞ்சிய வார்த்தைகள் அவன் காதுகளில் ஒலித்துக் கொண்டிருந்தன. அம்மாவுக்கு அவளைக் கண்டால் ஆகவில்லை என்றால், அவளைக் கல்யாணம் செய்துகொண்ட தவறு அவனுடையது. அதற்காக அவளை ஊருக்கு அனுப்பி என்ன செய்கிறது? அவள் வாழ்வு என்ன ஆவது? எவ்வளவு நாட்கள்வரை அது மாதிரி அவளைப் பிரித்து வைத்துக் காரியம் செய்ய முடியும்?

அவன் எதிர்பார்த்ததற்கு மாறாகக் கமலா போன பிறகும் வீட்டில் அமைதி ஏற்படவில்லை. அடிக்கடி பெரும் புயல் வீசிற்று. தாயாருடைய சுபாவம் என்று சில சமயம் எண்ணினான். ஆனால் அவன் பிறந்த நாள் முதல் காணாத சுபாவம், திடீரென்று கமலா வந்தது முதற் கொண்டு எப்படி உண்டாயிற்று என்பது அவனுக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது. அம்மா ஏன் அப்படி அவளுடைய எதிரியாக மாறி விட்டாள்? அவள் என்ன செய்து விட்டாள்? ஒரு நாள் சாயங்காலம் அவன் கொஞ்ச நேரம் தான் வீட்டிலில்லை. ஆற்றங்கரைப் பக்கம் போய் உலாவி விட்டு வந்தபோது வீட்டில் ஏகக் கூட்டம் கூடியிருந்தது.

அவனுடைய தாய், தன் பிள்ளையிடம் ஏதேதோ வாரி விட்டுக் கொண்டிருந்தாள். "போதும் எனக்கு! என் பிள்ளை கல்யாணம் செய்து கொண்டு வந்து இறக்கினான்; ஆறு மாசத்திற் கெல்லாம் அந்தப் பாவி, பிராமணனை — மாமனாரை — உருட்டி விட்டாள். 'நாட்டுப் பெண்ணுக்கு மூல நக்ஷத்திரம்; அதனால்தான் மாமனாரை மூலையில் வைத்து விட்டது!' என்று பலர் பலவாறு பேசிக்கொண்டார்கள். எப்படியோ வந்து நுழைந்தாள். குடும்பம் குட்டிச் சுவராகி விட்டது. அண்ணனுக்கும் தம்பிக்கும் ஆகாமல் அடித்தாள். அப்புறம் என்ன வேண்டும்?" என்று அழுகை, விம்மல் சகிதமாக ஒரே ரகளை செய்து கொண்டிருந்தாள்.

ராஜகோபாலனுக்கு அதிக நேரம் கேட்க முடியவில்லை. ராத்திரி சாப்பிட வந்த போது, "நீ அவளை என்ன செய்ய வேண்டுமென்கிறாய்? அவள் ஊருக்குத் தொலைந்து போன பிறகும்கூட உன் எரிச்சல் தணியவில்லையே? என்னத்திற்காக இப்படிப் பொய்யும் புளுகுமாகப் பிரசாரம் செய்து கொண்டிருக்கிறாய்?" என்று ஆத்திரத்தோடு கத்தினான்.

"ரொம்ப அழகாகத்தான் இருக்கிறது கூத்து! நான் என்ன பொய்யும் புளுகுமாகப் பிரசாரம் செய்கிறேன்? நீதானே எதிருக்கு எதிராகப் பார்க்கிறாய்? அடுத்த வீட்டு அம்புஜவுக்கும்தான் முத்துப்போல நாட்டுப் பெண் வந்திருக்கிறாள். அவரவர்கள் பண்ணின அதிர்ஷ்டமப்பா, அதிர்ஷ்டம்!" என்று பொழிந்து தள்ளினாள் தாய்.

"அது சரி அவளை நீ என்னதான் செய்ய வேண்டும் என்கிறாய்?"

"என்ன செய்யச் சொல்லுகிறது? உலகத்தில் நாட்டுப் பெண்கள் என்ன செய்கிறார்கள்? மாமியாரைத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டா கூத்தாடுகிறார்கள்? எல்லாம் போக எனக்கு என்ன செய்யக் கிடக்கிறது? ஒன்று மில்லை" என்று பிரசங்கத்தை அவள் தொடர்ந்து நடத்தினாள்.

"ஒன்று மில்லாத பொழுதா உனக்கு அப்படி இருக்கிறது? அவள் செத்தால் தான் உன் மனது குளிரும்போலிருக்கிறது!" என்றான் ராஜு.

கேட்ட வார்த்தைத் நிஜமென்று கொடுப்பதற்காகத் தோன்றிய பயங்கர உருவம் வாசலில் வந்திருப்பதைப்போல், யாரோ கதவைத் தட்டும் சத்தம் கேட்டது. அதைக் கேட்டு எல்லாரும் திரும்பிப் பார்த்தார்கள்.

"தபால்காரன், ஸார்!" என்றது குரல்.

ராஜுவின் மாமனாரிடமிருந்து தந்தி வந்திருந்தது. "எல்லாரும் நல்லபடியாக இருக்கவேண்டும், பகவானே!" என்ற நினைவுடன், அவன் அவசரமாகக் கையெழுத்துப் போட்டுத் தந்தியை வாங்கிப் பிரித்தான். "கமலா—அபாயம்" என்ற இரண்டே வார்த்தைகள் அதில் காணப்பட்டன.

எல்லோரும் உணர்விழந்து உட்கார்ந்து விட்டனர்.

## 3

நல்ல வேளையாகப் பத்தரை மணி வண்டிக்குப் போவதற்குக் கொஞ்சம் நேரமிருந்தது. அவசர அவசரமாகச் சாப்பாட்டை முடித்துக்கொண்டு அவன் சென்று ஏறினதுதான் தாமதம், ரயில் புறப்பட்டு விட்டது. அவனை வழியனுப்புவதற்காகத் தாயாரும் வந்திருந்தாள். அவள் முகம் வாடியிருந்தது. "ஈசுவரன் நமக்கு ஒரு குறையும் வைக்க மாட்டான்; தைரியமாகப் போய்விட்டு வா! உடம்பு கொஞ்சம் தேவலை என்றாலும் கமலாவைக் கூட்டிக் கொண்டு வந்து விடு. எல்லாருமாக நீலகிரிக்குப் போய் விட்டு உடம்பைப் பார்த்துக் கொண்டு வருவோம்" என்றாள்.

அதற்குள் ரயில் நகர்ந்து விட்டது.

சொல்ல முடியாத வேதனை ராஜுவின் மனதில் புகைந்து எழுந்தது. ஒன்றும் தோன்றாமல் படுக்கையை விரித்துப் படுத்துக் கொண்டான்.

கார்க் குருவிபோல் பறந்து சென்ற வண்டி நிலையமொன்று நின்றது. அந்த ஸ்டேஷன் பெயரைத் தெரிந்து கொள்வதற்காக ராஜகோபாலன் ஜன்னல் வழியாக வெளியே எட்டிப் பார்த்தான். காரிருட்டிலிருந்து தூங்கி வழிந்த குரல் ஒன்று "குமார மங்கலம்" என்று சத்தம் போட்டது. வரவேண்டிய இடத்திற்கு வந்து விட்டோமென்ற நினைவில் பிடித்த உணர்ச்சியுடன், வாரிச் சுருட்டிக்கொண்டு அவன் கீழே இறங்கினான். "மாமனார் வீட்டிலிருந்து யாராவது தன் வரவை எதிர்பார்த்துக் காத்திருப்பார்களோ?" என்ற எண்ணம். சுற்றிப் பார்த்தான். ஒருவரையும் காணவில்லை. வெளியில் நின்ற ஒரு ஜட்காவைப் பிடித்துக் கொண்டு அதி சீக்கிரத்தில் வீடு போய்ச் சேர்ந்தான். கவலை ததும்பிய முகத்துடன் மாமனார் திண்ணையில் உட்கார்ந்திருந்தார். ராஜகோபாலனை 'வா' என்றுகூட அந்த மனுஷன் ஒரு வார்த்தை கூப்பிடவில்லை.

"கமலா!" என்று அலறிக்கொண்டே உள்ளே ஓடினான் ராஜு.

கமலா படுக்கையின்மீது கிடந்தாள், உயிரற்று. அறையின் உள்ளும் புறமும் ஒரே சத்தமாக இருந்தது. வருவோரும் போவோருமாக இருந்தார்கள். அவனைப் பின்புறத்திலிருந்து யாரோ தட்டியமாதிரி யிருந்தது.

அவன் திரும்பிப் பார்க்கவில்லை. அதே குரல் மறுபடியும் "ஸார், டிக்கெட்!" என்றது.

டிக்கெட்டா!—ராஜு ஒன்றும் புரியாமல் சிறிது நேரம் வரை திகைப்புடன் அசைவற்றிருந்தான். அவன் கண்டது அவ்வளவும் கனவா? இறந்ததாகக் கனவு கண்டால், உண்மையில் அவர்கள் பிழைத்துக்கொள்வார்கள் என்பார்களே!

ராஜுவுக்கு மயிர்க் கூச்செடுத்தது. அடுத்த வண்டியில் ஒரு வடநாட்டுப் பைராகி, கபீர்தாஸரின் 'வாழ்க்கையின் வெற்றி' என்ற அற்புதப் பாடலைக் கம்பீரமாகப் பாடிக் கொண்டிருந்தான். வந்த யமன் போய்விட்டான் என்பது அதன் அர்த்தமா?

கிழக்கே செவ்வானம் படர்ந்தது. நம்பிக்கைக்கும் நரக லோகத்திற்கும் நடுவில் ஊசலாடிக்கொண்டிருந்த ராஜுகோபாலனைக் கொண்டுபோய்க் குமாரமங்கலம் ஸ்டேஷனில் தள்ளியது ரயில். ஸ்டேஷனில் மாமனார் வீட்டு மனிதர் ஒருவருமில்லை. கனவில் கண்டமாதிரி யல்லவா இருக்கிறது! கனவின் பிற்பகுதியும் நிஜமாகி விடுமோ?

ஜட்கா ஒன்றைப் பிடித்துக் கொண்டு வீட்டுக்குச் சென்றான். அங்கே திண்ணையில் அவன் பார்த்த முதல் பேர்வழி மாமனார். மறுபடியும் அவனுக்குக் கனவின் நினைவு வந்தது.

அவர் 'வா' என்று கூட அவனைக் கூப்பிடவில்லை.

நாக்கு உலர்ந்து மேலண்ணத்தில் ஒட்டிக் கொள்ள, "கமலா எங்கே?" என்று கேட்டான் ராஜு. அவனுடைய தகப்பனார் கையை உட்புறம் காட்டினார்.

கமலா படுத்துக் கொண்டிருந்தாள். ஆனால் உயிருடன்தான் இருந்தாள்.

"உடம்பு எப்படி யிருக்கிறது, கமலா?" என்று கேட்டான் ராஜு.

"உடம்பு தேவலை" என்று சொல்லுவதற்குள் அவள் கண்களிலிருந்து கலகலவென்று நீர்த்துளிகள் உதிர்ந்தன.

"என்ன, கமலா?" என்றான் ராஜு கோபாலன். கமலா அவன் கையில் ஒரு தந்தியை எடுத்துக் கொடுத்து விட்டு, "இது இப்போதுதான் வந்தது. எனக்கும் அப்பாவுக்கும் தவிர வேறு ஒருவருக்கும் இது தெரியாது" என்றாள்.

துயரத்தினால் அவளால் பேச முடியவில்லை.

திடீரென்று மாரடைப்பால் தாயார் இறந்து விட்டாள் என்று ஊரிலிருந்து சங்கரன் தந்தி அடித்திருந்தான். சப்தநாடியும் ஒடுங்கியதைப் போன்ற உணர்ச்சி ராஜுகோபாலனுக்கு ஏற்பட்டது. அவன் தலை 'கிர்' என்று சுற்றிற்று. தன் தாயார் அவ்வளவு சீக்கிரத்தில் காலமாய் விடுவாள் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. ஸ்டேஷனுக்குக் கூட வந்து வழி யனுப்பியதை நினைத்தான்.

காலையில் எழுந்து மாடியில் வீணை சாதகம் செய்து கொண்டிருந்த கமலாவின் சின்னஞ் சிறு தங்கை வீணையுடன் வந்து, "சுருதி கலைந்து போயிருக்கிறது, கமலா! கொஞ்சம் சேர்த்துக் கொடு" என்றாள்.

ராஜுவுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

ஏனெனில், அவனுடைய வாழ்க்கையே அப்பொழுது சுருதி கலைந்திருந்ததல்லவா?



"காஷியர் வேலைக்கு வந்திருக்கிறீரே, யோக்கியமாக இருப்பீரா?"
"ஓ! இருப்பேன்! உங்கள் பணம் எல்லாவற்றையும் என் சொந்தப் பணம் மாதிரி கவனித்துக் கொள்வேன்!"




### சிக்கனம்

முகுந்தன் :—உங்கள் சங்கத்தின் தேர்தலில் போன வருஷம் இருந்த நிர்வாக அதிகாரிகளே மறுபடியும் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார்களே, ஏன் அப்படி?

பலராமன் :—போன வருஷம் அச்சடித்த வோட்டர் பேப்பர்கள் நிறைய மிச்சமாகி விட்டன. அதில் அந்த வருஷ நிர்வாக அதிகாரிகள் பெயரெல்லாம் போட்டிருந்தது. அவை வீணாகப் போக வேண்டாமென்று அப்படிச் செய்தோம்.

—வி. ஆர். ராஜாராவ்.

★

### சந்தோஷம்

முதல்வர் :—அதோ போகிறாரே, அவர் எதற்காக சந்தோஷப் படுகிறார் என்று உனக்குத் தெரியுமா?

அடுத்தவர் :—தெரியும்; அவர் குறைந்த விலையில் ஒரு மோட்டார் வாங்கினதற்காக.

முதல்வர் :—சரி, நான் எதற்காகச் சந்தோஷப்படுகிறேன் தெரியுமா?

அடுத்தவர் :—தெரியாது.

முதல்வர் :—அந்தக் கார் என் கையை விட்டுப் போனதற்காக!

—ஆர். ராமசுப்ரமண்யன்.

★

### ரொம்ப அவசரம்!

நள்ளிரவில் ஒருவர், டாக்டர் வீட்டின் கதவைத் தட்டினார். டாக்டர் வந்தார். வந்தவர், "ரொம்ப அவசரம்" என்றார். இருவரும் காரில் விடு வந்து சேர்ந்தனர்.

"உமக்கு 'விஸிடிங் பீஸ்' எவ்வளவு?"

"இரண்டு ரூபாய்."

"இந்தாரும்! அந்த டாக்ஸி டிரைவர் என்னை இங்கே கொண்டு வந்து விடுவதற்கு அநியாயமாய் ஐந்து ரூபாய் கேட்டான்!"

—வி. ராஜகோபாலன்.

### சரியான பதில்!

ஹோட்டலில் சப்ளை செய்பவர் (மானேஜரிடம்) :—அதோ சாப்பிடுபவர் நான் கொண்டுவந்து வைத்த காப்பியைப் பார்த்து 'நாய் சாப்பிடுமா இதை?' என்று கேட்கிறார்.

மானேஜர் (கோபமாக) :—போடா மூட்டாள்! காப்பியைக் கொண்டுபோய் உள்ளே வைத்துவிட்டு, நாய் சாப்பிடும்படி ஏதாவது இருந்தால் கொண்டுவந்து கொடு!

—எஸ். வெங்கடேசன்.

★

### சோம்பேறி!

மேஸ்திரி (சிற்றாளைக் கூப்பிட்டு):—என்னடா, நீ ஒவ்வொரு பலகையாகத் தூக்கிக் கொண்டு போகிறாய்! அதோ பார், அவன் இரண்டு இரண்டாகக் கொண்டு போகிறானே?

சிற்றாள் :—ஆமாங்க; அவனுக்கு இரண்டு நடையாய்க் கொண்டு போகிறதற்குச் சோம்பலுங்க!

—ராஜா.

★

### நேரம் தவறாமை!

அம்மாள் :—நாளைக்கு எட்டு மணிக்கு வா, அய்யாவைத் துணி தரச் சொல்கிறேன்.

பிச்சைக்காரன் :—நான் காலை பத்து மணி முதல் மாலை ஐந்து மணி வரையில் தான் பிச்சை எடுப்பது வழக்கம்!

—பி. கே. கிருஷ்ணமூர்த்தி.

★

### காரணம்

ராமு : (பக்கத்து வீட்டுக்காரரிடம்) :—ஏன், ஐயா! நீ அந்தச் செட்டியாருக்குக் கொடுக்கவேண்டிய கடனைக் கொடுத்துத் தொலைக்கிறதுதானே?



பக்கத்து வீட்டுக்காரர் :—உமக்கு ஏன் அவ்வளவு அக்கறை?

ராமு :—உம்மிடம் வரும்போதெல்லாம் அவர் என்னிடமும் வந்து நான் அவருக்குக் கொடுக்க வேண்டிய கடனைக் கேட்கிறார்!

—ம. அ. பெருமாள்.

# DENA BANK

**DEVKARAN NANJEE BANKING Co. LTD.**

தலைமை ஆபீஸ்:

**தேவகரன் நாஞ்ஜீ பில்டிங்ஸ், போர்ட், பம்பாய்**

தேனு பாங்கியின் பிராஞ்சு ஆபீஸ்:

29, லிங்க செட்டித் தெரு :: ஜார்ஜ் டவுன், மதராஸ்



| | | | |
|---|---|---|---|
| அதிகாரம் பெற்ற மூலதனம் | ... | ரூ. | 1,00,00,000 |
| வாக்களிக்கப்பட்டு & செலுத்தப்பட்ட மூலதனம் | | .. | 50,00,000 |
| ரிஸர்வ் நிதி | ... | .. | 12,00,000 |
| மொத்த டிபாஸிட்டுகள் | 31—5—45 | .. | 7,86,28,614 |
| நடை முதல் நிதிகள் | .. | .. | 9,08,40,521 |
| மொத்த கணக்குகள் | .. | | 40,687 |
| மொத்த பிராஞ்சுகள் | ... | | 42 |

## தேனு பாங்கி அளிக்கும் ஊழியங்கள்

- ★ பாங்கிங் அலுவல்கள்
- ★ ஸேப் டிபாஸிட் வால்ட்கள்
- ★ ரொக்க ஸர்டிபிகேட்டுகள்
- ★ முதலீடு ஊழியம்
- ★ சேமிப்பு இன்ஷ்யூரன்ஸ்
- ★ சிறிய வெள்ளித் துண்டுகள்
- ★ ஞாயிற்றுக்கிழமை ஸேவிங்ஸ் பாங்கி அலுவல்கள்

பம்பாய்
- தாகுர்த்வார்
- ஸாண்ட்ஹர்ஸ்ட் பிரிட்ஜ்
- கல்பாதேவி
- மாந்த்வி
- ஜவேரிபஜார்
- புலேச்வர்
- தாதர்
- கொலாபா
- ஷேர் பஜார்
- மாதுங்கா

பம்பாய் சுற்றுப்புறம்
- கார்
- ஸாண்டா குருஸ்
- வில்லே பார்லே
- வந்தரன் காம்ப்

நாஸிக்
- நாஸிக் ஸிடி
- நாஸிக் ரோட்

ஆனந்த்

அஹமதாபாத்
- காந்தி ரோட்
- மஸ்கதி மார்க்கட்
- மாணெக் சௌக்
- டில்லி சக்லா

நவஸாரி

பூனா
- புத்வார் பேட்டை
- ரவிவார் பேட்டை
- காம்ப்

துனுவாடா

மாதேரன்

ஷோலாபூர்

சூரத்
- கன்பீட்
- பரன்புரி பாகல்

பாவ நகர்

பரோடா

பர்ஹன்பூர்
- ஸிடி
- மில் சப் ஆபீஸ்

அஹமத் நகர்

அம்ரேலி

ராஜ்கோட்

மண்மாட்

கோத்ரா

நடியாட்

பல்ஸார்

**பிரவின்சந்திர வி. காந்தி,**
மானேஜிங் டைரக்டர்

**S. Y. ஸ்வாமி,**
மானேஜர், மதராஸ் பிராஞ்சு

# கல்யாணப் பத்திரிகை

## நாடோடி

"ஸார், போஸ்ட்!" என்று அன்று தபால்காரன் கத்தியதும், வழக்கம்போல் நான், என் தங்கை பாரு, என் தம்பி அரட்டைக்கல்லி பாலு, என் இரண்டாவது தம்பி தஞ்ஜிப் பயல், என் தங்கை அடங்காப் பிடாரி வஸந்து எல்லாரும் ஓடினோம்.

வழக்கம்போல் அன்று கடிதம் என் கையில்தான் கிடைத்தது. வேறு ஒன்றும் இல்லை, கல்யாணப் பத்திரிகை!

கல்யாணப் பத்திரிகையைக் கண்டதும் யாருக்குக் கல்யாணம் என்று தெரிந்து கொள்ள எல்லாரும் ஆவலாய்த் துடித்தார்கள்.

"என்னடா! யாருக்குக் கல்யாணம்?" என்று கேட்டாள் மன்னி.

யாருக்குக் கல்யாணம் என்று தெரிந்து கொள்வதற்காகக் கல்யாணப் பத்திரிகையைப் பிரித்தேன். பத்திரிகையின் இரண்டாவது மூன்றாவது பக்கங்களில் அச்சிடப் பட்டிருக்கும் தமிழ்ப் பகுதியைப் படிக்க முயன்றேன்.

ஆனால் அந்த முயற்சியில் என்னால் வெற்றியடைய முடியவில்லை. கல்யாணப் பத்திரிகையை, அதுவும் தமிழ்ப் பகுதியை மஞ்சள் பக்கத்தில் தங்க எழுத்துக்களில் அச்சடிக்க வேண்டும் என்று எந்த மகானுபாவன் ஆரம்பித்து வைத்தானோ தெரியவில்லை, பத்திரிகையைப் படித்துப் புரிந்து கொள்வதற்கு அலாதி சாமர்த்தியம் வேண்டியிருக்கிறது. பத்திரிகையைப் பக்கத்தில் கொண்டு வந்தாலும் படிக்க முடியாது. தூரத்தில் கொண்டுபோனாலும் படிக்க முடியாது. வெளிச்சம் பட்டாலும் படிக்க முடியாது. வெளிச்சம் படாவிட்டாலும் படிக்க முடியாது. அதை ஒரு மாதிரி சாமர்த்தியமாக, லாகவமாக, தனிக் கோணத்தில் வைத்துப் படித்தால்தான் படிக்க முடியும்.

அப்படியே அந்தப் பத்திரிகையை லாகவமாகத் தனிக் கோணத்தில் வைத்துப் படித்துப் பார்த்தேன். என்ன பிரயோஜனம்? அப்பொழுதும் யாருக்குக் கல்யாணம் என்பது துளிக்கூட விளங்கவில்லை.

தண்டாங்குறை மிராசுதார் ராமசுவாமி அய்யர் காலஞ்சென்ற தம் தம்பியின் இரண்டாவது குமாரனின் மூன்றாவது குமாரனுக்குக் கல்யாணம் என்று எழுதியிருந்தார்.

தண்டங்குறையாவது, மிராசுதார் ராமசுவாமி அய்யராவது என்று புரியாமல் தவித்தேன்.

"என்னடா, அரைமணியாகப் பத்திரிகையைக் கையில் வைத்துக்கொண்டு விழிக்கிறாய்? யாருக்கடா கல்யாணம்!" என்று மன்னி கேட்டாள்.

அரைமணி நேரத்துக்குள் நம் கல்யாணப் பத்திரிகைகளிலிருந்து யாருக்குக் கல்யாணம் என்று கண்டு பிடித்துவிட முடியும் என்று மன்னி நினைக்கிறாளே. இந்த மதியீனத்தை என்னவென்று சொல்ல?

கல்யாணப் பத்திரிகைகள் போடுகிறவர்கள் யாருக்குக் கல்யாணம் என்பது நமக்குத் தெரியக் கூடாது என்பதற்காகவே பத்திரிகைகள் போடுகிறார்களோ என்று எனக்கு வெகு நாளாகவே ஒரு சந்தேகம்.

மாப்பிள்ளையின் பெயரை மொட்டையாய்ப் போட்டு விட்டு, மாப்பிள்ளையின் தாத்தாவின் தமையனாரின் பெயர் (ஏனெனில் குடும்பத்திலேயே அவர்தான் பெரியவராம், அவர் பெயரைத்தான் போடவேண்டுமாம்!) அவருக்கு எந்த ஊர், என்ன உத்தியோகம் முதலிய விவரங்களைக் கொடுக்கும்போது நமக்கு விஷயமே புரிவதில்லை.

அப்படித்தான் தாத்தாவின் தமையனார் இருந்த ஊரைப் போடுகிறார்களா? அதுவும் கிடையாது. தாத்தாவின் தமையனாரின் பூர்வீக ஊரைப் போடுவார்கள். பூர்வீக ஊர் என்றால் என்ன என்று தெரியுமா? இந்தத் தாத்தாவின் தமையனாரின் தாத்தாவின் தாத்தா குடியிருந்த இடம். அந்த ஊர் இப்பொழுது இருந்த இடம் தெரியாமல் அழிந்து போனாலும் போயிருக்கலாம். இருந்தாலும் கல்யாணப் பத்திரிகைக்கென்று அந்த ஊரின் பெயரை ஞாபகம் வைத்துக் கொண்டு எழுதுவார்கள்.

"ஸ்திரீகளைப் பழித்துப் பிரமாதமாக எழுதுகிறாயே? இந்தச் சின்ன விஷயம் கண்டு பிடிக்கத் தெரியவில்லை. இங்கே

கொண்டா, நான் பார்த்துச் சொல்கிறேன்" என்று பாரு என் கையிலிருந்து பத்திரிகையைப் பிடுங்கிக் கொண்டு, முதல் பக்கத்தில் அச்சிடப்பட்டுள்ள ஆங்கிலப் பகுதியைப் படிக்க ஆரம்பித்தாள்.

நம் கல்யாணப் பத்திரிகைகளில் யாருக்குக் கல்யாணம் என்பதை ஆங்கிலப் பகுதியிலிருந்து சற்றுச் சுலபமாகத் தெரிந்து கொள்ளலாம். ஆங்கிலப் பகுதியில் தாத்தாவின் பெயரோ, அல்லது தாத்தாவின் தமையனாரின் பெயரோ இருக்காது. அதற்குப் பதில் மாப்பிள்ளையின் தகப்பனாரோ, அல்லது மாப்பிள்ளையின் பெரியப்பாவோ, சித்தப்பாவோதான் நம்மைக் கல்யாணத்துக்கு அழைத்திருப்பார். வெகு ஜம்பமாகப் பாரு என் கையிலிருந்து பத்திரிகையைப் பிடுங்கிக் கொண்டாளே யொழிய இதிலிருந்தும் அவளால் யாருக்குக் கல்யாணம் என்று கண்டு பிடிக்க முடியவில்லை.

இந்தச் சமயத்தில் அரட்டைக் கல்லி பாலு குறுக்கிட்டு, "பூ! இதைக் கண்டு பிடிக்க இத்தனை கஷ்டப்படுகிறீர்களே? இங்கே கொண்டா, நான் கண்டு பிடிக்கிறேன்" என்று பத்திரிகையைப் பாருவிடமிருந்து பிடுங்கிக் கொண்டான்.

ஆங்கிலப் பகுதியில் மாப்பிள்ளையின் உத்தியோகம் போட்டிருக்கும், அதைப் பார்த்துக் கண்டுபிடித்து விடலாம் என்பது பாலுவின் எண்ணம்!

ஆனால் அதிலும் ஏமாற்றமே ஏற்பட்டது. கவர்மெண்ட் ஆப் இந்தியாவில் ஊழியம் புரியும் கோவிந்தன் என்று போட்டிருந்தால் எப்படிக் கண்டு பிடிப்பது!

ஆனால் பாவம், அந்தக் கோவிந்தனையும் கோபித்துக்கொண்டு பயன் இல்லை. சாதாரண வேலையில் இருக்கும் யாரும் தங்கள் வேலை இன்னது என்று கல்யாணப் பத்திரிகையில் விளம்பரப்படுத்திக் கொள்வதில்லை. ஏதோ பெரிய உத்தியோகம் வகிக்கிறார் என்று எல்லாரும் நினைத்துக் கொள்ளட்டுமே யென்று ஆபீஸ் பெயரை மாத்திரம் போடுவார்கள்.

முதல் மூன்று பக்கங்களிலிருந்தும் யாருக்குக் கல்யாணம் என்று கண்டு பிடிக்க முடியாமற் போகவே நாலாவது பக்கத்தைத் திருப்பிப் பார்த்தேன்.

என் வரவை எத்தனை பேர் வெகு ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்று கணக்குப் பார்த்தேன். அந்தப் பக்கத்தில் எத்தனை பேர் எதிர்பார்க்க முடியுமோ, அத்தனை பேர் என் வரவை 'ஆவலுடன் எதிர்பார்த்துக்' கொண்டிருந்தார்கள். கல்யாண மாப்பிள்ளைக்குச் சொந்தக்காரர்களின் பெயர் அத்தனையும் அதில் காணப்பட்டது. அவரவர்கள் வேலை செய்யும் காரியாலயத்தின் பெயரும் கூடவே கொடுக்கப்பட்டிருந்தது. தாங்கள் மிகவும் உயர்ந்த வேலை பார்ப்பவர்கள் என்று நம்பியவர்கள் மட்டும் சூப்பரண்ட் என்றோ அல்லது மானேஜர் என்றோ தங்கள் வேலையைப் போட்டிருந்தார்கள்.

எதற்காகக் கல்யாணப் பத்திரிகையின் கடைசிப் பக்கத்தை இதையெல்லாம் போட்டு வீணாக்குகிறார்கள் என்று நான் வெகு காலம் நினைத்ததுண்டு. ஆனால் அன்று நான் இந்த எண்ணத்தை வாபஸ் வாங்கிக்கொண்டு விட்டேன்.

யாருக்குக் கல்யாணம் என்பதை நாம் கல்யாணப் பத்திரிகையிலிருந்து தெரிந்து கொள்வதற்கு, அந்த 'உங்கள் வரவை ஆவலுடன் எதிர்பார்க்கும்' ஜாபிதாவை ஊன்றிப் படிப்பதைவிட வேறு நல்ல வழி கிடையாது.

"கண்டு பிடித்து விட்டேன்! கண்டு பிடித்து விட்டேன்!" என்று கூத்தாடினேன். "யாருக்கு? யாருக்கு?" என்று சுற்றி யிருந்தவர்கள் கூத்தாடினார்கள்.

"அடுத்த வீட்டு அண்ணாசாமி அய்யரின் கடைசித் தம்பிக்குக் கல்யாணம்" என்றேன்.

"எப்படி அண்ணா கண்டு பிடித்தாய்?" என்று கேட்டாள் பாரு.

"எப்படியா! ஸ்திரீகளாகிய உங்களுக்கு மூளை இருந்தால்தானே? இதோ இந்த ஜாபிதாவைப் பார். அண்ணாசாமி அய்யர் பெயர் போட்டிருக்கிறதா? அவர் பெயருக்குப் போட்டிருக்கும் முதல் எழுத்துக்கள் தானே மாப்பிள்ளையின் பெயருக்கும் போட்டிருக்கிறது?" என்று பெருமையாகச் சொன்னேன்.

இந்தச் சமயம் அடுத்த வீட்டு அண்ணாசாமி அய்யரே, ஒரு கல்யாணப் பத்திரிகையுடன் உள்ளே நுழைந்தார்.

"என்ன ஸார்! இந்தப் பத்திரிகையிலிருந்து யாருக்குக் கல்யாணம் என்று கண்டு பிடிக்க முடியவில்லையே? நீங்கள் பார்த்துச் சொல்ல முடியுமா?" என்று பத்திரிகையைக் கையில் கொடுத்தார். பத்திரிகையைக் கண்டதும் நான் விழுந்து விழுந்து சிரித்தேன். ஏனெனில் அது எங்கள் வீட்டுப் பாருவின் கல்யாணப் பத்திரிகை!

அஜீர்ணமுண்டாகும் ஆகாரங்களை குழந்தைகளுக்கு கொடுக்காதீர்கள். நீங்கள் உட்கொள்ளும் ஆகாரங்களையோ, பதார்த்தங்களையோ குழந்தைகளுக்கு கொடுப்பதினால் குழந்தைகளுக்கு கோளாறு ஏற்படலாம். இம்மாதிரி தவறுதலான போஷிப்பில் ஜாக்கிரதை வேண்டும்.



**ஆரம்ப அறிகுறிகளை கவனிக்கவும்**

அடிக்கடி ஜுரம் ஏற்படுதல், மலச்சிக்கல், அதிக மலப்போக்கு, வாந்தி, பசியின்மை, வயறு பொருமல், பொதுவாக, சோர்ந்திருத்தல், அடிக்கடி சிணு சிணுத்தல்.



**நேர்மையான குணமளிக்கும் சிகிச்சை செய்யுங்கள்**

ஜம்மியின் லிவர் க்யூர் கொடுப்பதினால், உமது கவலையை நீக்கி, பணச் செலவை குறைத்து, வியாதியை முற்ற விடாமல் பின்னிட்டு ஏற்படக்கூடிய அபாயத்தைத் தவிர்க்கும்.

ஜம்மியின்
# லிவர்க்யூர்
உபயோகியுங்கள்

குழந்தையின், ஈரல் குலைக்கட்டிக்கு ஜம்மியின் லிவர் க்யூர் உபயோகியுங்கள். எல்லா விடங்களிலும் விற்கப்படுகின்றன

**ஜம்மி வெங்கிட்டரமணய்யா & சன்ஸ்**

மைலாப்பூர் — மதராஸ்.

பிராஞ்சுகள்:— பம்பாய், கல்கத்தா, டில்லி, திருச்சினாப்பள்ளி, பெங்களூர், கும்பகோணம்.

J. 64 TM

# தி இந்தியன் பாங்க் லிமிடெட்.

★

தலைமை ஆபீஸ்:
"இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்"
வடக்கு பீச் ரோடு, மதராஸ்

★

லோகல் ஆபீஸ்கள்:

எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி
மவுண்டு ரோடு, மயிலாப்பூர்,
தியாகராய நகர், புரசவாக்கம்.

சென்னை மாகாணத்தில் எல்லா முக்கியமான இடங்களிலும், பம்பாயிலும் பிராஞ்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன.

★

வழங்கி வாக்களிக்கப்பட்ட மூலதனம் ரூ. 60,00,000

செலுத்தப்பட்ட மூலதனம் ரூ. 33,61,250

ரிஸர்வ் நிதி ரூ. 33,62,500

டெபாஸிட்டுகள் ரூ. 11½ கோடிக்கு அதிகம்

★

சகலவிதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும். மற்ற விவரங்களுக்குப் பாங்கியின் எந்த ஆபீஸுக்காவது எழுதி தெரிந்து கொள்ளலாம்.

N. கோபால அய்யர்
செக்ரடரி.

N. P. B.




# சிறந்ததை விரும்பும் சகலருக்கும்

நறுமணம் கமழும் சிகரெட்டை விரும்புவோர் டி லக்ஸ் டெனுரை வரவேற்பார்கள். சிகரெட்டின் நறுமணத்தின் உயர்நிலையை டெனுர் சிகரெட் அடைந்திருக்கிறதென அதை உபயோகிப்பவர்களால் கருதப்படுகிறது. உத்தரவாதமுள்ள 100% பொருக்கின வர்ஜீனியா புகையிலை இந்த சிகரெட்டுகள் செய்வதில் உபயோகப்படுவதே இதை எல்லாரும் விரும்புவதற்கு முக்கிய காரணம்.

**டி லக்ஸ் டெனுர் சிகரெட்டு**
**ஜேம்ஸ் கார்ல்டன் லிட், லண்டன்**

**tenor**

**Is truly a de Luxe Cigarette**

JAMES CARLTON LTD, LONDON.

அழகை
மேன்மை
படுத்துங்கள்



# அருணா

அணியுங்கள் ஆடையை

மேனியை அடுத்த
"அருணா" ஆடை
உள்ளத்தை உற்சாகப்
படுத்தும் உழைப்பிற்
குகந்த நிறைவேற்றம்



**அருணா மில்ஸ் லி.** ஆமதாபாத்

Regd. No. M. 4392



Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, 116-119, Sladens Gardens, Poonamallee High Road, Kilpauk, Madras.

புதிய கொலம்பியா ரிகார்டுகள்:



லலிதா வெங்கட்ராம் பாடிய

GE. 6188

கண்ணனைக் கண்டதுண்டோ

(2 பாகங்கள்)

பிரபாவதி டாக்கி பாட்டுகள்

S.P.L. தனலக்ஷ்மி பாடிய



GE. 6226 { ஜகதம்பிகையே..... காணாத காக்ஷி.....

GE. 6227 { மாரன் வருகிறான் நிலவோ............

காரைக்காலம்மையார் டாக்கி பாட்டுகள்

காளி N. ரத்னம்

C.T. ராஜகாந்தம் பாடிய

GE. 6189

கோழின்னு ஆத்திர





ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், மவுண்ட் ரோட், மதராஸ்.

# சினிமா நட்சத்திரங்களைப் போல, நீங்களும் உங்கள் சருமத்தைக் காப்பாற்றுங்கள்!

## மனோரமா

என்னுடைய சருமம் எப்பொழுதும் இளமையாகவும், ஆரோக்கியமாகவும் இருக்கிறதற்கு பொறுப்பான லக்ஸ் டாய்லெட் சோப்பிற்கு நான் நன்றி செலுத்துகிறேன் என்று மனோரமா கூறுகிறார். எல்லா இந்திய சினிமா நட்சத்திரங்களைப் போல இவர் இந்த உயர்ந்த சோப்பைத் தவறாமல் உபயோகிக்கிறார். மேலும் அவர் சொல்லுகிறார் ''லக்ஸ் டாய்லெட் சோப் தன் நுரையினால் சருமத்தை மாசில்லாமல் வைத்துக் கொள்வது அதிசயமாயிருக்கிறது''




## லக்ஸ் டாய்லெட் ஸோப்

c

